உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பொன்மாத்து நாடகம்.

இது

மதுரை திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் ஆதீனம்
வித்வான் திருவாலக்கோயில் திருச்சிற்றம்பலத்தம்பிரான் அவர்களுடைய
மாணாக்கரும்
செங்கற்பட்டு நத்தம் வாத்தியார்
வெங்கடாசல முதலியார் அவர்களுடைய புத்திரருமான
செங்கற்பட்டு டிஸ்டிரிக்கட் கோர்ட்டு பென்ஷன் அமீனு,

## நத்தம். பொன்னம்பல முதலியாரால்,

இயற்றப்பட்டு,



இதில் முற்பாதி ஷை யார் சோதரர் நத்தம். முருகேச முதலியாராலும்
பிற்பாதி சென்னை சூளை-சாமிபிள்ளை வீதி சங்கீத வித்வான்
டி. புருஷோத்தம நாயகர் அவர்களாலும் இராகதாளம் அமைக்கப்பட்டு.

அஷ்டாவதானம்

## பூவை-கலியாணசுந்தர முதலியாரால்,

பார்வையிடப்பட்டு,

சென்னை-புரசை : ம-ா-ா-ஶ்ரீ. நே. முனிசாமி முதலியார் அவர்களால்,
நபி அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது.



இதின் விலை [illegible] [வி. பி. சார்ஜ் [illegible]

1902.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பொன்மரத்து நாடகம்.

இது

மதுரை திருஞானசம்பந்த மூர்த்திசுவாமிகள் ஆதீனம்

வித்வான் திருவாலக்கோயில் திருச்சிற்றம்பலத்தம்பிரான் அவர்களுடைய

மாணாக்கரும்

செங்கற்பட்டு நத்தம் வாத்தியார்

வெங்கடாசல முதலியார் அவர்களுடைய புத்திரருமான

செங்கற்பட்டு டிஸ்டிரிக்கட் கோர்ட்டு பென்ஷன் அமீனு,

**நத்தம். பொன்னம்பல முதலியாரால்,**

இயற்றப்பட்டு,



இதில் முற்பாதி ஷெ யார் சோதரர் நத்தம். முருகேச முதலியாராலும்

பிற்பாதி சென்னை சூளை-சாமிபிள்ளை வீதி சங்கீத வித்வான்

டி. புருஷோத்தம நாயகர் அவர்களாலும் இராகதாளம் அமைக்கப்பட்டு.

அஷ்டாவதானம்

**பூவை-கலியாணசுந்தர முதலியாரால்,**

பார்வையிடப்பட்டு,

சென்னை-புரசை: ம-௱-௱-ஸ்ரீ. நே. முனிசாமி முதலியார் அவர்களால்,

நூபி அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது.



1902.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பொன்மரத்து நாடகம்.

## சரித்திரச்சுருக்கம்.

" உலகெலா முணர்ந்தோ தற்கரியவன்
நிலவுலாவிய நீர்மலிவேணியன்
அலகில்சோதிய னம்பலத்தாடுவான்
மலர்சிலம்படி வாழ்த்திவணங்குவாம். "

அனாதிமுத்தனாகிய சிவபெருமான் அனாதிபெத்தர்களாகிய ஆன்மாக்களின் பொருட்டு அனாதிமாயையினின்றுங் காரியப்படுத்தித் தந்த பிரபஞ்ச பதார்த்தங்களு ளொன்றாய விருட்ச சாதிகட்குள் அரசாக விளங்குவதூஉம், பொன் என்னும் மங்கள அடைமொழி பெற்றிருப்பதூஉம், சர்வ ஜனங்களாலும் மரமல்லிகை கருடமல்லிகையென வழைக்கப்பெற்றதூஉம், கிரிமல்லிகை குடசம், சக்கரம், வச்சகம் எனும் பெயர்கள் வாய்ந்திருப்பதூஉமாகிய ஒரு விருட்சத்தின் அருமையினையும் பெருமையினையும் தெரிந்து அவ்விருட்ச சம்பந்தமாக இயற்றப்பட்ட வொரு நாடகத்தின்சரித்திரமாவது :—

இஃது பொன்மரத்து நாடகமெனப்பெயர் புனைந்திருப்பதால் அவ்வாறு பொன்மரமென்று சிறப்புப்பெயர் வாய்ந்ததற்குக் காரணம் யாதெனில் ஈண்டு சங்கிரகமாகக் கூறுகின்றனம்.

அளகாபுரியினும் சிறந்து அகண்ட ஐஸ்வரியங்கள் நிறைந்துள்ள அயோத்தியாபுரியின்கண் அறுபதினாயிரவருடகாலம் அரசுபுரிந்த தசரத சக்கிரவர்த்தியின் திருமகனாகிய ஸ்ரீராமபிரான் தமது சிற்றன்னையாகிய கைகேசியினால் பதினான்கு வருடம் ஆரண்யம் செல்லும்படி நேர்ந்து பரதாழ்வார் அரசுபுரிந்த காலத்தில் அவர் தன் றமயன் ஸ்ரீராம மூர்த்தியின் பிரிவாற்றாமையைச்சற்றேனும் சகியாதவராய் இராஜ காரியத்தில் பற்றற்றுத்தமயனருளிய பாதுகையைச் சிங்காதனமேற்றி மிகுந்த துக்கசாகரத்தில் மூழ்கினராய்த் தன் றமயன் வருகையை எதிர்நோக்கிய வண்ணம் அயோத்தியை வெறுத்து நந்திக்கிராமத்தில் வாசமுற்றிருந்தன ரன்றோ ? இங்ஙனம் அயோத்தியாபுரி நாதனற்ற இராஜ்யமா யிருந்தமையாற் குடிகள் யாவரும் சேர்ந்து மகாராஜாவை முற்றிலும் வஞ்சித்து அரசாங்கத்திற்குச் செலுத்தவேண்டிய பகுதியைச்சரிவரச் செலுத்தாது தொன்றுதொட்டு அனுட்டிக்கப்பட்டு வந்த விதிகளை மாற்றி அரசனுக்கு ஒருவருஷம் மேல்வாரமும் மறுவருடம் கீழ்வாரமும் செலுத்த வேண்டுமென்று தங்களுக்குள் தாங்களே தீர்மானித்து அவ்வாறே மேல் வாரம் சேரவேண்டியவருடத்தில் கிழங்குவகைகளைக்குடிகள் சாகுபடிசெய்து

மேல்வாரமென இராஜாங்கத்திற்குத்தழைகளைப்பகுதியாகச்செலுத்தியும்,கீழ் வாரம்சேரவேண்டியவருடத்தில்தானியவகைகளைச்சாகுபடிசெய்துகதிர்களைத் தாங்கள் அனுபவித்துக்கொண்டு வைக்கோல் முதலியவைகளை இராஜாங்கத் திற்குப்பகுதிசெலுத்தியும் இவ்வாறு பலன்களையெல்லாம் குடிகள் அடைந்து வந்தார்கள். அதனுல் இராஜாங்கமானதுமிகுந்த எழ்மை திதிக்குட்பட்டு ரகு சக்கிரவர்த்தியாண்டநாள் தொடங்கித்தசரத சக்கிரவர்த்தி ஆண்டநாள்வரை யிலும் சேகரித்த மூல திரவியங்களெல்லாம் அரண்மனைச் செலவிற்கும் இராஜாங்கச் செலவிற்கும் இப்பதினன்கு வருடகாலமாய் உபயோகிக்கப் பட்டுவந்தது. குடிகள் ஒவ்வொருவரும் அளகேசனையொத்த செல்வவந்தராயி னர்கள். இஃதுஇவ்வாறுகமாதுர்வாக்கியபரிபாலனநிமித்தம் ஆரண்யம்சென்ற ஸ்ரீராமபிரான் பதினன்கு வருடமுங்கடந்து சீதாபிராட்டியார் லட்சுமணப்பெ ருமாள் சமேதராய் அனுமான் சுக்ரீபன் அங்கதன் சாம்புவந்தன் முதலிய அநேக வானரசைனியங்கள் புடைசூழ அயோத்தியாபுரிக்குத் திரும்பிவந்த காலத்தில் பரதாழ்வார் எதிர்கொண்டடிபணிந்து இராச்சிய பட்டாபிஷேகம் செய்துகொள்ளும்படி பிரார்த்திக்கஸ்ரீராமமூர்த்தியும் அதற்கிணங்கி மகுடாபி ஷேகத்திற்கு வேண்டிய செலவுகளுக்காக திரவிய இருப்பைப்பார்க்கையில் பொக்கிஷ அறைகளெல்லாம் திறக்கப்பட்டு அதில்யாதொரு திரவியமு மில்லாமல் வெறுமையா யிருக்கக்கண்டுகவலைகூர்ந்து நடந்தவர்த்தமானங்களை யறிந்துகொண்டு பூசுணிவிரைகளை விஸ்தாரம்தருவித்துக்குடிகளுக்கெல்லாம் விரைவாரகம் கொடுத்து அவரவர் தோட்டங்களில் விருத்திசெய்து தமது பட்டாபிஷேகத்திற்காக குடிகள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு பழவிகிதம் இராஜாங்கத்திற்குப் பகுதி செலுத்தும்படியாக ஸ்ரீராமபிரான் ஆக்கியா பித்த னர். அவ்வாறு நடந்துகொள்ளக் குடிகளும் சம்மதித்து ஒவ்வொருவரும் மேற் படி செடிகளைவிருத்தி செய்யலானர்கள். காய்கள் காய்க்கும் பருவம்வந்த போது வானரச்சேனைகள் யாவும்குடிகள் போட்ட செடிகளையெல்லாம் வே ரோடு பிடுங்கி எறிந்துநிர்மூலஞ் செய்துவிட்டன. இதனுல் குடிகள் மிகுந்த கஷ்டத்தையும், நஷ்டத்தையும் அடைந்து எவ்வாறுபகுதி செலுத்துவோ மென்று துக்கித்திருந்தார்கள். ஸ்ரீராமருடைய பட்டாபிஷேகமுகூர்த்தநாளும் நெருங்கிவிட்டது. குடிகள் பழம்பகுதி செலுத்துவதற்கு மார்க்கமில்லாது விழிக்கலானர்கள். விலைக்கு வாங்குவதற்கும் உலகத்தில் செடிகள்கிடையா. ஆயினும், இராஜாங்கத்தைச் சேர்ந்த கம்பத்த தோட்டங்களில் மேற்படி பழ ங்கள் அளவுசங்கை யில்லாமல் அபாரமாகவும் பிர்ம்மாண்டமாகவும் பழுத்து நிறைந்திருந்தன. வானரச்சைனியங்கள் மேற்படி கம்பத்த தோட்டங்களைச் சுக்ரீவாக்கினையின்கீழ் காவல் பூண்டு வாயுபகவானும் நெருங்காவண்ணம் பாதுகாக்கப்பட்டிருந்தது. அங்கு இடைக்கிடை பொன் நிறுத்துக்கொடுப்பவர் களுக்கு எவ்வளவு பழம் வேண்டுமானபோதிலும் கொடுக்கப்படுமென்று அர ண்மனைத் தோட்ட அதிகாரிகள் உத்திரவு செய்தார்கள். எப்படியாயினும் அரசனுக்குப் பகுதி செலுத்த வேண்டுமே என்கிற பயத்தினுலும், பதினன்கு வருடகாலமாய் அரசனை வஞ்சித்துசேமித்து வைக்கப்பட்டிருந்த செல்வச் செருக்கினுலும்,வேறு கதியின்மையாலும், அவ்வாறு செய்வதற்குயாவரும்சம்ம

தித்தவர்களாய்த் தத்தம் பூஸ்திதிகளை யெல்லாம் விற்றுப்போட்டும் இடைகட்டாது மிகவருந்தி இனி வேறு பொருளு மின்றித்தத்தம் மனைவியர் அணிந்திருந்த திருமங்கிலியத்தைக் கொண்டுபோய் வைத்த பின்னரே சரிப்பட்டு ஷெ பழங்களைக் கொண்டுபோய் பகுதியாகச் செலுத்தி இராஜாக்கினைக்குத் தப்பித்துக்கொண்டார்கள். இவ்வண்ணம் கற்புடைய மங்கையர் தமதுயிர் போற் பாதுகாக்கப்படும் மங்கிலியத்தை ஒரு நிமிடமேனும் நீத்திருப்பது மிகுந்த பாவமென்றுன்னி மரமல்லிகை மரத்தினுல் மங்கிலியம் செய்துதரித்துக் கொண்டு தங்கள் தங்களுக் குற்ற மனக்கிலேசத்தை ஒருவாறு அகற்றிக் கொண்டார்கள். சந்தனம் தேக்குமுதலிய மரங்களால் மங்கிலியம் செய்து தரித்துக் கொள்ளாமல் மரமல்லிகையாற் செய்து கொண்டதற்குக் காரணமேதெனின் ஒவ்வொருவரும் நாடோறும் தவருது ஜலத்தில் முழுக வேண்டி யிருத்தலினுல் மற்ற மரங்களானுல் சாக்காடு அடையுமென்றும் மரமல்லிகை மட்டும் ஒருபோதும் சாக்கா டடையாது எந்நாளும் தைலம் வற்ரு திருப்பதென்றும் தெரிந்தே அவ்வாறு செய்யலானுர்கள். அக்காலத்தில் பொன்னுக்குப்பதிலாகத் திருமங்கிலியமாய்உபயோகிக்கப்பட்டதினுல் பொன்மரமென்னும் ஓர் சிறப்புப் பெயரும் அதற் குண்டாயிற்று. இதே காரணத்தினுல் மரத்தாலி கட்ட நேர்ந்தது என்னும் வாக்கியம் இவ்வுலகத்தில் நெடுங்காலமாக வழங்கி வருகின்றது. இனிபொன்மரத்து நாடகத்தின் முக்கிய கருத்தினை இங்குச்சுருக்கிக் கூறுகின்ருேம்.

---

## (நூல்வரலாறு.)

பிரமதேவனுல் சிருட்டிக்கப்பட்ட இவ்வுலகில் பெரும்பான்மையான விடங்களில் பூர்வத்தில் ஆரண்யம் ஆகாயத்தை யளாவி யிருந்த தனுல் கள்ளர்கள் மிகுதியாகி நகரங்களில் புகுந்து கொள்ளையிடுவதைச்சகிக்கலாற்ருதஜனங்கள் அவ்வாரண்யங்களி லுள்ள விருட்சஜாதிகளைப் பற்பல காரணங்களினுல் நிர்மூலமாக்கி வந்தனர்கள். பின்னர் மிகக்கியாதிபெற்று விளங்கும் நமது ஆங்கிலேயராட்சியில்ஆரண்யத்தையாரும் நாசப்படுத்த ஒட்டாமற்றடுத்துப்பரிபாலிக்கலானுர்கள். சென்னைமா நகரத்துக் கருகாமையில் மிஸ்டர் கேமல் துரையவர்களால்சவுக்குமரம் விருத்திசெய்யப்பட்டுப்பலராலும்போற்றப்பட்டு வந்தபோதிலும் விறகு ஒன்றுக்கே யல்லாமல் இதரகாட்டுமரங்களுக் குண்டாகும் நஷ்டத்தை ஈடுகெட்டக்கூடாமையாயிருந்தபடியால் கல்லால் குருந்து கொன்றை வில்வம் ஆகிய நான்குவகை விருட்சங்களும் இப்பேராபத்தினின்றும் தம்மினங்களை எவ்வாறு விலக்கிப் பாதுகாக்கலாமென்றுன்னிக் காட்டிலும் நாட்டிலும் செறிந்துள்ள விருட்சகோடிகட்கெல்லாம்இவ்விஷயத்தினைத் தெரிவித்து அதின் பிரகாரம் கைலாயமலைச்சாரலில் ஓர்தினம் கோடானுகோடி மரங்கள்யாவும் மகாநாடு கூடிப்பேச வாரம்பித்தன. இக்கூட்டத்தில்

கல்லால் அக்கிராசனம் வகிக்கவேண்டுமெனக்குருந்துபிரேரேபிக்க அவ்வாறே சபையின் சம்மதத்தின்பேரில் கல்லால் தலைமை வகித்து பேசவாரம்பித்தது. (3 4. பக்கங்களில் காண்க) இவ்வுலகத்திற்கெல்லாம் ஆதாரமாயிருந்து ஆகாயத்தை யளாவி வாழ்ந்திருந்த நம்மை உலகத்தார் தங்கள் நன்மையின்பொருட்டு நம்மினங்களை நாளடைவில் அழித்துவரலானூர்கள். இவ்வாபத்தினினும் நம்மை மீட்கவேண்டியபாரம் நமது அரசாகிய அஸ்வத்த விருட்சத்திற்குண்டாயிருந்தும் அது எக்காரணத்தாலோ சற்றேனும் கவனியாதுபராமுகமுற்றிருக்கின்றது. இருடிகள் தவத்திற்கேற்ற உத்தியான வனமாகவும் அன்னோர் வேதாகமபுராணங்களை யோதுதற்கு நைமிசாரண்யமாகவும், ஸ்ரீராமர் பதினன்கு வருடமும் பஞ்சபாண்டவர்கள் பன்னிரண்டுவருடமும் வனவாசம் வந்திருந்தபோதும், அரிச்சந்திரன் நளன் முதலிய சக்கிரவர்த்திகள் நம்மை வந்தடுத்தபோதும், அத்தகையோர்கட்குத் தமது விசாரம்தோற்றவொட்டாது சொர்க்கலோகமாகவும் இருந்தது நாமே யொழிய வேறில்லை. அரசும் வேம்பும் தெய்வத்தன்மைபொருந்தி அவரவர் மனோபீஷ்டங்களை நிறைவேற்றினு லும் நம்முடைய துன்பத்தைத் தடுக்கும் வல்லமை அரசுக்கில்லை. நாம் இதுகாறும் நம்பியிருந்ததுபோல் இனியும் அஸ்வத்த விருட்சத்தை நம்பியிருந்தால் பெருந்துன்பத்திற்காளாய்விடுவோம். ஆகையால் இனியேனும் ஜாக்கிரதையோடிருந்து அரசாளத்தக்க வேறு ஓர் விருட்சத்தை நமக்குத் தலைமையாகத் தேடிக்கொள்ளுதல் நமது கடனாகும். அப்பேற்றை யடையத்தக்க மரம் நம்மில் எதுவென யோசிக்குங்கால் பொன்மரமொன்றே தக்கதென வெண்ணுகின்றனம். அதன் பெருமையைக்கூறுதல் எம்போல்வாரா லாகத்தக்க தன்றெனினும் ஒருவாறு இங்குக்கூறுதலவசியமென வெண்ணி யுரைப்பாம். ஆ! ஆ!! பொன்மரத்தின் போற்றலை யுங்கட்குச் சொல்லநேர்ந்த எமது பாக்கிய விசேடத்தினை என்னென்றுரைக்கத்தகுமென உள்ளமகிழ்ந்து கல்லால் கூறத்தொடங்கிற்று. நம்மினங்கள் யாவற்றிலும் சிறந்து விளங்குவதும், வித்துக்களினாலும் கிளைகளினாலும் வேர்களினாலும் ஒன்றனந்தமாக விருத்தியாகிச் சூர்ய மண்டல முதலிய அண்டங்கள் யாவையும் ஊடுருவிவளர்ந்து ஸ்ரீராமர் கரிகாற்சோழன் பீமன் முதலியவர்களை யொத்து மிகப்பலம் பெற்றுள்ளதும், சூரபத்மன் முதலிய எண்ணிறந்த அசுரர்களை யொத்து ஆயுதங்களினால் வெட்ட வெட்டத் தளிர்த்து ஒன்று பல லட்சங்களாக விருத்தியடைந்து வருவதும், இந்திரன் சந்திரன் முதலிய தேவர்கட்காயினும் குற்றமுள்ளதே யல்லது எவ்வித குற்றங்களுக்கும் இடமின்றிச்சிறப்புற்றிருப்பது மாகியபொன்மரமே தக்கதெனப் பிரபல நியாயங்களைக்கல்லால் எடுத்துக்கூற, இவ்வார்த்தைகளைக் குருந்த விருட்சமானது நன்கு நன்கென்று ஆமோதித்துப்பேச, கொன்றைமரமானது இதற்குச் சற்றேனும் சம்மதியாமல் புஷ்பமரங்களி லொன்றுய பொன்மரத்தையோ நாம் அரசாகமதித்து வாழ்வது, இம்மொழி ஒவ்வாதென மறுக்க மீண்டும் கல்லாலானது பொன்மரமானது புஷ்பமரங்களிற் சேர்க்கப் படவில்லையென்றும் கோட்டுப்பூ கொடிப்பூ நீர்ப்பூ நிலப்பூவாகிய இந்நான்கு வகை புஷ்பங்களிலும் குறிக்கப்படவில்லை யென்றும் ஆகையினால் அது நமக்குத்தலைமை வகிக்கத்தக்கதேயென நிலைநாட்டலும்சபையோர்கள் வீகெட்

டுதற்குச் சிற்பநூல் கருத்தே தென்ன சிற்பநூலில் பொன்மரத்தை விலக்க வில்லையெனக் கல்லால் உறுதிப்படுத்திற்று (5 முதல் 11 பக்கம் வரையில் பார்க்க) இதுகாறும் அக்கிராசனாதிபதி கூறியவண்ணம் பொன்மரம் அரசாளத்தக்கதாகப் பூர்வத்தில் நாம் தவமிழைக்க வில்லையென கொன்றை மறுக்க, இனி அவ்வாறு தவத்தை செய்யலாமேயென வில்வங்கூறலும் பிரமனால் சிருட்டிக்கப்பட்ட ஆன்மகோடிகளுள் நாம் ஓரறிவுயிராயிருக்க எவ்வாறு தவ மிழைக்கக்கூடுமென கொன்றை மறுத்துப்பேச, வில்வ மரமானது இவ்வாக்கியம் சற்றேனும் பொருந்தாதெனப் பல நியாய சாஸ்திரப் பிரமாணங்களைக்கொண்டு பேசத்தொடங்கியது. தவத்திற்குரிய சத்துவகுணம் முக்கியமாய் நம்மிடத்தி லமைந்திருக்கின்றன வென்றும், ஸ்ரீபால சுப்பிரமணியக் கடவுள் வேங்கை வடிவாகவும், உமையவள் திருக்காஞ்சியில் தவமிழைக்க மாமரத்தடியிலேயும், ஜனகாதிகள் நால்வரும் கல்லாலின் நீழலிலேயும், திருவாதவூரராகிய மணிவாசகப்பெருமான் குருந்தடியிலேயும் ஏனையதேவர், முனிவர் சித்தர்பத்தராதியோரும்நம்மையண்டித்தமது இஷ்ட காமியமோக்ஷ சாம்பராச்சியங்களை யடைந்துள்ளாராதலால், வானோர்களைக் காட்டிலும் நாம்சிறப்படைந்துள்ளோமென்றும்,கொற்றங்குடியார் ஓர்முள்ளிச் செடிக்கு மோட்சம் தந்ததும், திருக்கழுக்குன்றத்தில் ஓராலவிருட்சம் வலம் வந்துகொண்டிருப்பதும், பிரயத்தியட்சமா யிருப்பதால் நாம் தவமியற்றத் தகும் தகும் தகும் எனக்கூறிற்று. இதனைக்கேட்ட சந்தன விருட்சம் ஈரேழு பதினான்கு லோகங்களினும் நமது விருட்சகோடிகளின் சகாயமில்லாவிடில் ஒன்றும்நடவாதென்றும்,தேவலோகத்தார்க்குக் கற்பகவிருட்சமொன்றே சகல சம்பத்தையும் அளிக்கின்றதென்றும்,உலகம்யாவையு முண்டருளிய திருநெடுமாலை பிரளயாந்தத்தில் ஓர் ஆலிலை தாங்கிற்றெனில் இன்னமும் சிறப்பேதுக் கென்றும் சம்பந்தமூர்த்தியின் திருப்பதிகம் பெற்று ஒத்தூரிலுள்ள பனைமரங்கள் சிவபதவி பெற்றதென்றும், இவ்விதம் அநேக காரணங்களைக் காட்டிற்று. இக்கருத்தினை யாமோதித்தவாறு மந்தாரை பேசத் தொடங்கியது. உலகினிடத்தில் உழுதுண்ணுஞ் சிறுகோலும் அரசன்கை செங்கோலும் நாமாயிருந்து சர்வ ஜனங்களையும் பரிபாலித்து வருகின்றோமென்றும், பொருள்தேடுநிமித்தம் கடல்நதிகளை கடப்பவர்களுக்குக் கப்பலும் தெப்பலுமாயிருந்து உதவுகின்றோமென்றும், மற்றும இப்பூமியின் சகல பதார்த்தங்களிலும் நாமே நிறைந்திருந்து பரிமளித்து வருகின்றோமென்றும், அத்திமுதலெறும்பிரான சர்வஜீவகோடிகளும் அருந்தவமியற்றி முத்திபெற்றனவென்றும்,நாமாத்திரம் தவமிழைக்க லாகாதெனக்கூற எவரும்பத்துத்தலை யுடைத்தா யிருக்கவில்லையென்றும், ஆரணநூற்களைக்காட்டி யுபந்நியாசம் புரிந்தது. இவையெல்லாம் உண்மையே யானபோதிலும் நம்மினங்கள் கோயில் கோபுரங்களில் முளைத்து நிர்மூலப்படுத்துங் குற்ற முற்றிருப்பதால் சிவபிரான் பொறாரென்று கொன்றை மறுத்துப்பேச,அதுநம்முடையகுற்றமல்லவென்றும் இதுகாறும் நமக்கு அரசாகவிருந்த அஸ்வத்த விருட்சத்தின் குற்றமென்றும் கல்லால் தடுத்துரைக்க எவ்வாறாயினும் சிவபிரான் இரக்கமுள்ளவ ரல்லரென்றும் முப்புரத்தையும் மன்மதனையும் எரித்தும் எமனையுதைத்தும் மாமனைவதைத்தும் மழுவேந்

தியும் எண்ணாயிரஞ்சமணரைக் கழுவிலேற்றியும்பிள்ளைக்கறியையும் ஆலகால விஷத்தையும் உட்கொண்டும்,யானைத்தோல் புலித்தோல் சர்ப்பம் முதலியவைகளை ஆடையாபரணங்களாகத் தரித்தும், பிரமன் சிரங்கொய்தும், சங்காரத் தொழிலையே தமக்குரிய முக்கிய தொழிலாகக்கொண்டும் வாழ்ந்துள்ளாரென்றும் அத்தகையோரைநாம்வழுத்துவதால்பொன்மரம் ராஜனுமோவென்றும் கோங்கு ஆட்சேபிக்க,இவ்வார்த்தையைக் கேட்டகல்லால்சகியாது சிவா!சிவா! என்றுபோற்றி மெய்யடியார்கட்காக எந்தைபிரான்காட்டிய திருவிளையாடல்களையெல்லாம் நினைந்துசெப்பத்தொடங்கிற்று. வந்தியென்னும்ஓர்கிழவிக்குக்கூலியாளாகியும், பாணபத்திரனுக்காக விறகைச்சுமந்தும்,அர்ச்சுனனால் வில்லடிப்பட்டும், பன்றிக்குட்டிகளுக்குப் பாலைப்புகட்டியும், தாயிலாப்பெண்ணுக்குத்தாயாகி மருத்துவஞ்செய்தும், எண்ணிறந்தஅற்புதகோலங்களைக்காட்டிச் சர்வஜீவதயாபரனென்று பெயர்பெற்று விளங்கிய எந்தைமிகுந்த தயாளுவென்றுரைக்க, சபையோர் யாவரும் மனமுருகிப் போற்றிநிற்கையில் அங்ஙனமாயின் கைலாயமலைச்சார்பாகிய இவ்விடத்திலேயே நாமனைவரும் தவஞ்செய்வோமென்று வில்வங்கூற எண்ணரியதேவர் முனிவர்இருடிகள் யாவரும் பூவுலகில் தவமியற்றினாரானதால் நாமும் அங்ஙனமே செல்லல் வேண்டுமெனக்கல்லால் கூறிற்று (19. 20. பக்கங்காண்க) பிரவாகம் சூறைக்காற்று முதலிய விடர்களில்லாமல் தவத்திற்கேற்ற க்ஷேத்திரங்களை ஆலோசிக்கத்தொடங்கிக் கொன்றைமரம் செப்பத்தொடங்கிற்று. சோழதேசத்தில் காவேரிநதிக்குத் தென்கரையிலுற்ற திருப்பெருந்துறை முதலிய சிலஸ்தலங்களையும், அதன்பின்னர் வன்னிவிருட்சம் கலையநல்லூர் முதலியசில க்ஷேத்திரங்களையும், அதன்மேல் தேவதாரம் செங்காட்டங்குடி முதலியசில திருப்பதிகளையும், மந்தாரை கடிக்குளம் முதலிய சிலபுண்ணிய நகரங்களையும், இதன்பின்னர் ஆத்திமரம் தெங்கூர்முதலிய சிலபதிகளையும், குருந்தமரம் அகத்தியான்பள்ளி முதலிய திவ்விய க்ஷேத்திரங்ஙளைகளையும் எடுத்துதகரிதத்தில்அவைகளில் தங்களுக்கேற்ற வசதிகள் கிடையாமையால் திருக்காஞ்சியொன்றே தக்கதெனக் குருந்து பிரேரேபிக்க அங்கும் சப்தசாகரங்களும் சப்த நதிகளாக நிறைந்திருத்தலால் கூடாதென வாத்திமறுக்க அதன்மேல் காஞ்சிமாநகரத்திற்கு எக்காலத்தினும் சலனமில்லையெனப் பிரளயகால சக்தி முதலிய காவல்கள் அமைந்திருப்பதை நிருபணஞ்செய்து காஞ்சியே நன்றெனக்குருந்து நிலைநாட்டியது. (உக-முதல்-உகூ-வரையில் பக்கம் பார்க்க) இதனைச் சபையோர் யாவரும் எற்றுக்கொண்டு தவத்திற்கு முந்தியே தீர்த்தயாத்திரை தலயாத்திரை முடிக்கவேண்டுமெனக் கல்லால் செப்ப, நன்கு நன்கென்று விருட்சகோடிகள் யாவும் சம்மதித்துத் திருக்கைலாயத்தைப் பணிந்து நீங்கிய பின்னர், கங்கை துங்கபத்திரை, யமுனை, சரஸ்வதி, நர்மதை, கோதாவரி, கிருஷ்ணைமுதலிய புண்ணிய நதிகளில் நீராடி அங்க வங்க கலிங்க காஸ்மீர காம்போஜ முதலிய ஐம்பத்தாறு தேசங்களையும் வலம்வந்து பின்னர் சர்வஜீவதயாபரனுயுள்ள சாக்ஷாத் சிவபெருமான் திருக்கோயில் கொண்டெழுந்தருளும். ஸ்தலயாத்திரைசெய்ய ஆவல்கொண்டு அவற்றுள் திருஞானசம்பந்த மூர்த்திசுவாமிகள், திருநாவுக்கரசுசுவாமிகள், சுந்தரமூர்த்திசுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய தேவாரத்

திருப்பதிகம்பெற்ற அடியில் அட்டவணையில்கண்ட க்ஷேத்திரங்கள் முக்கிய மானதென்று விருட்சகோடிகள் விரதம்பூண்டு சபாநாயகமாகப்பொருந்திய கல்லாலவிருட்சத்தின் வார்த்தையை மேற்கொண்டவாகி நல்லதினங்கொண்டு யாத்திரை செய்யத்தொடங்கின. தாங்கள் சபைகூடியிருந்த கைலாயகிரியின் கண் எழுந்தருளியிருக்கும் உமாமஹேஸ்வரராகிய ஸ்ரீகண்டபரமேஸ்வரரை ப்பாடி ஆனந்தபாஷ்பம் பொழிந்து அரகரமஹாதேவ அழலாடி, அமல, ஆல காலவிடமுண்ட ஐய என்றுதொழுது தோத்திரஞ்செய்து அங்ஙனம் நின் றுந் திருக்கேதாரம் அநேகதங் காவதம் இந்திரநீல பருப்பதம் இத்தலங்களை யாத்திரைசெய்து, சப்தபுரியிலொன்றாகியும் இறக்க முத்தி தருவதுமாகிய காசி க்ஷேத்திரத்தைக்கண்டு, அறுபத்துநான்கு கடங்களும் ஸ்நானஞ்செய்து, பஸ்ம ருத்திராக்ஷதரராய், அளவற்றதானங்கொடுத்த, ஜென்மாந்திரத்திற் செய்த தீவினைகளையெல்லாம் நீறாகக்கெடுத்த விசாலாக்ஷியம்பாள் சமேத ராகிய விசுவநாதேஸ்வரர் சன்னிதானத்தையடுத்து, சிவபூஜை செய்யத்தொ டுத்து, அதனைச் சாங்கோபாங்கமாக முடித்து, க்ஷேத்திரமான்மியம் யாவும் படித்து, அவைகள்பூர்ணமாய் மனதில்தடித்து, ஆனந்த பாஷ்பம் பெருக்கை வடித்து அன்புசாகரத்திலாடி, திவ்யப்பிரபந்தம்பாடி, பிரியாவிடைபெற்று வாடி, சத்ய அரிச்சந்திரனை விற்பனைசெய்த கடைவீதியைத் தேடி அஃதுட் படகாசிபட்டின முழுதும வலம்வந்து, அதைப்பிரிந்து, திருப்பருப்பதம் மல்லி கார்ச்சுனம் என்னும் ஸ்ரீசைலம்தொழுது, துளுவநாட்டையணுகிக்கோகர்ணம் * நஞ்சுண்டகூடல் இத்தலங்களை வணங்கி, தொண்டைநாட்டைச்சேர்ந்து தென்கைலையும் வாயுபூதஸ்தலமுமாகிய ஸ்ரீகாளத்தி மலையைக்கண்டு, ஞான ப்பூங்கோதையம்பாள் சமேதராய் நற்கீரருக்கு முத்திதந்தவராய், கண்ணப்ப சுவாமிகள் கண்ணைத்தங்கண்ணிற் பெற்றவராய், பாம்பு யானை சிலந்தி இவை களால் பூஜிக்கப்பெற்றவராய் உள்ளகாளத்தி நாதரைவணங்கி, உடல்கம்பித் துத்தோத்திரஞ்செய்து அத்தலத்தினின்றும் நீங்கமனம்வராமல், ஒருவாறு துணிந்து நீங்கித் தணிகாசலபதிவாழும் திருத்தணியும் திருக்கள்ளில் முத லிய பல ஸ்தலங்களையும் யாத்திரைசெய்து இவ்வுலகில் எங்கும் உயர்வு ஒப்பி ல்லாததும் எந்நாளும் பக்ஷிகள் வந்து அன்னம் உண்ணப் பெற்றதும், இந்திர னால் பன்னிரண்டு வருடத்திற் கொருதரம் இடியபிஷேகஞ் செய்யப்பெற்ற தும், சங்குகள் பன்னிரண்டுவருடத் திற்கொருமுறை பிறக்கும் சங்குதீர்த் தத்தையுடையதும், மணிவாசகப் பிரபுவுக்குக் கணக்கில்லாத கோலங்களைக் காட்டி யருளியதுமாகிய திருக்கழுக்குன்றத்தையடைந்து, கிரிப்பிரதக்ஷணம் பக்ஷிதரிசனம் செய்து, காஞ்சிபுரம் தவிர மற்றஸ்தலங்கள் யாத்திரையைப் பூர்த்திசெய்து, தொண்டைநாட்டைக்கடந்து மகதநாடென்னும் நடுநாடு சேர் ந்து அடிமுடியாரும் காண்பதற்கரிதாய் வளர்ந்ததும் நினைக்கமுத்திதருவதும் தேயு பூதஸ்தலமுமாகிய திருவண்ணாமலையை வலம்வந்து வணங்கி, மற்று முள்ள நடுநாட்டுஸ்தலங்களின் யாத்திரைப்பூர்த்தி செய்தாயிற்று. (30-முதல் 42-வரையில் பக்கங்காண்க) இப்பால் கொங்கு நாட்டைச்சேர்ந்து பலவற்புத ங்கள் வாய்ந்த திருக்கருவூர் முருகப்பிரான் வாழும் வெண்ணெய்மலை வெஞ்ச

மாக்கூடல் திருப்பாண்டிக்கொடுமுடி உமையவள் அர்த்த நாரீஸ்வரம் பெற்ற திருச்செங்குன்றூர் இவற்றின்யாத்திரைமுடித்து, திருநணு என்னும்பவானிக் கூடல்வந்து, தங்கிக் காவிரிநதி பவானிநதி அமிர்தசரசு ஆகிய திருவேணிசங்கமதீர்த்தம் சூரியதீர்த்தம் காயத்திரி சாவித்திரி முதலிய தீர்த்தங்கள் யாவும் ஆடிவருகையில், அங்கு நீராடவந்திருந்த சைவர்களிற் சிலர் அன்று அமாவாசை புண்ணியகாலமாகவிருந்தும் சைவசமய ஒழுக்கத்திற்கு விரோதமாகவும், அக்கினி நரகத்திற்கு ஏதுவாகவும் தந்தகாஷ்டத்தால் தந்தசுத்தி செய்வதையும் வலப்பாலில்வாய் கொப்பளிப்பதையும் பஸ்மதாரண மில்லாமல் வந்திருந்தவர்களுடைய குறைகளைக்கண்டு சகிக்காமல் அடியிற்கூறியவண்ணம் சிவாகமப் பிரசங்கஞ்செய்யவதாயின. எங்ஙனமெனின் நித்திரைவிட்டுவெளியில்வரும் போது பஸ்மந்தரிக்காமல் வரப்படாது. வந்தாலன்று உபவாசமாயிருந்து பஞ்சகவ்வியமருந்தி செபஞ்செய்யவேண்டும்.

நித்யகர்மநெறி.

பூதியணிந்தே புறத்திற்புறப்படுக பூதியணியாதொழுந்தபோது.
அற்றைக்குபவசியா யானேந்தினையருந்தி யுற்றேயிருநூறுசை.

பன்னிரண்டுமாத சங்கிரமத்திலும், சந்திர சூரிய கிரணங்களிலும், பிரதமை சஷ்டி, நவமி, அமாவாசை பௌர்ணமி இந்தத்திதிகளிலும் தந்தகாஷ்டத்தால் தந்த சுத்திசெய்யின் ஏழுதலை முறைவரையில் அக்கினிநரகத்தில் மூழ்கநேரிடும் அந்நாட்களில் மாவிலை முதலிய பரிசுத்த விலையால் தந்தசுத்திசெய்யவேண்டும்.

சைவசமயநெறி.

சங்கிரமத்தினுபராகம்விதிபாதாதியினும் தங்குமவரில்லந்தனில்.
மூந்துதிதியாறு மும்மூன்றுமைம்மூன்றும் தந்தசுத்திசெய்யாமைசால்பு.
விலக்கியநாளிற்பல் விளக்கிற்குலமேழலக்கணுறுமென்றேயறி.
துய்யவிலையாற்றந்த சுத்திசெய்துநாவழித்துத் துய்யபுனலாற்சுத்திசெய்.

வலது பக்கத்தில் வாய்கொப்பளித்தால் அக்கினி நரகத்தில் அழுந்தவேணும்.

சைவசமயநெறி.

வலப்பாலிற்கொப்பளித்தால் வன்னிநரகம்புக்கலற்படுவனென்றேயறி

என்றிவை முதலிய சைவாகமப் பிரசங்கஞ்செய்து பாவானியைவிட்டு முருகப்பிரானது சென்னிமலை சிவமலை திருமுருகன்பூண்டி முதலைவாய்ப்பிள்ளை தந்த அவிநாசியெனும் தக்ஷணகாசி மேலச்சிதம்பரமென்னுந் திருப்பேரூர் வேலவன்

வாழும் மருதமலை வெள்ளியமலை இத்தலங்களையும் பணிந்து கொங்குநாட்டு யாத்திரை பூர்த்திசெய்தனம்.(43-முதல் 46-வரையில் பக்கங்காண்க)

அனந்தரம் மலைநாட்டையடைந்து சுந்தரமூர்த்தி சுவாமிகள் வெள்ளையானைமீது ஸ்ரீகைலாயம் எழுந்தருளப்பெற்ற திருவஞ்சைக்களத்தைச் சேவித்துப் பிரம்மதேவர் கோயில்கொண்டெழுந்தருளி யிருக்கும் சுசிந்தரமும் கன்னியாகுமரியும் தொழுது மலைநாட்டு யாத்திரையும் பூர்த்திசெய்தனம். பாண்டிநாட்டில் த்வாதசாந்தஸ்தலமாகிய தென்மதுரையை யடைந்து தடாதகைப்பிராட்டியாராகிய ஸ்ரீபராசத்தியும் குமாரக்கடவுளும் சிவபெருமானும் ஆகிய மூவரும் அரசாக்ஷிசெய்ததும், அறுபத்துநான்கு திருவிளையாடல் செய்யப்பெற்றதுமாகிய திருவாலவாயைதெரிசித்துத் திருப்பரங்குன்று முதலிய ஸ்தலங்களைவணங்கித் திருவிராமேச்சுரத்தைக் கண்டோம் பேரானந்தங் கொண்டோம் ஜென்மாந்திரங்களிற்செய்த அனந்தங்கோடி பாபங்களியாவும் விண்டோம் இனிப்பிறவிசாகரத்தையண்டோம் நம்மிஷ்டங்களெல்லாம் இனி நமக்குச்சித்தியாயதொரு குறையும் நமக்கில்லை வேண்டியவரமெல்லாம் நமக்குச்சொந்தமேயெனமகிழ்ந்து, ஸ்ரீராமருடைய ஆச்சனைப் பிரபாவங்கள் முதலியதைப்புகழ்ந்து, மகாசங்கற்பங்கள்செய்து அமுததீர்த்தம் தனுஷ்கோடி முதலிய வநேகதீர்த்தங்களாடினேம் பர்வதவர்த்தினி அம்பாள்சமேத இராமநாதேஸ்வரரை வணங்கிக்கூத்தாடினேம். அடியில் குறித்த அட்டவணையில் விவரித்திருக்கு மகிமை மிகுந்த அறுபத்துமூவருக்கு மடாலயம் அமைத்தோம் பின்னர் * உத்திரகோசமங்கை திருச்சுழியல் முதலிய ஸ்தலங்களை வணங்கித் திருநெல்வேலியைக் காணப்பெற்றேம் தாம்பிரவர்ணி நதிமுதலிய தீர்த்தங்களிளெல்லாம் மூழ்கிக் காந்திமதியம்பாள் சமேத நெல்வேலி நாதரைத் தொழுது தோத்திரஞ்செய்து சிவசுப்பிரமணிய சுவாமிக்குக் கும்பாபிஷேகம் நடக்கும் சமையங்கிடைத்துத் திருச்செந்தூரை தெரிசித்து மற்ற ஸ்தலங்களையும் வணங்கிப் பாண்டிநாட்டைப்பிரிந்து ஈழநாடுசேர்ந்து திருக்கோணமாமலை திருக்கேதீச்சரம் முருகப்பிரான்வாழும் கதிர்காமமும் தொழுது யாழ்ப்பாணத்தாரை வாழ்த்தினேமெனக்கூறி இப்பால் எண்ணிலாத க்ஷேத்திரங்கள் நிறைந்த சோழநாட்டை யடைந்தன (47 - முதல் - 57 - வரையில் பக்கங் காண்க.)

ஆகாயபூதஸ்தலமாகியும் தரிசனஞ்செய்த மாத்திரையில் முத்திதருவதாயுமாயுள்ள சிதம்பரம் சேர்ந்து, நடராஜமூர்த்தியின் அன்வரத தாண்டவமியற்றும் குஞ்சித பாதத்தைத் தரிசித்தோம். வினையீட்டங்களை யோட்டவேண்டுமென்று சிவகங்கை முதலிய தீர்த்தங்களாடிச் சிவபூஜையியற்றிப் பஞ்சசபையுந் தரிசித்துப் பரவயப்பட்டுச் சிவானந்த வெள்ளத்திலழுந்தி அங்குச் சேக்கிழார்சுவாமிகளுக்கு ஆலயம் அமைத்து அங்குச்சிலநாள் தங்கிப் பிரிவுற வருந்தி ஒருவாறு மனந்துணிந்து பிரிந்து திருவேட்கள முதலியபல ஸ்தலங்களைப்பணிந்து எங்கள் திருஞானசம்பந்த மூர்த்திசுவாமிகள் திருவவதாரஞ்

செய்த சீர்காழியையவணங்கித் திருக்காட்டுப்பள்ளி முதலிய திருப்பதிகளை த்தொழுது அப்புபூதஸ்தலமாகியஜம்புகேஸ்வரமுதல்அனந்தமானஸ்தலங்களை யாத்திரைசெய்து கும்பகோணம் வந்திறைஞ்சின. (58-முதல் 71 வரையில் பக்கம்பார்க்க) இப்பால் திருவிடைமருதூர் முதல் திருநாகைக்காரோணம் வரையில் பல திவ்விய க்ஷேத்திரங்களையும் எங்கள் தியாகராஜப்பிரபு ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளுக்குத் தூதுசென்றதும், பிறக்கமுத்திதருவதமாகிய திருவாரூரை யிறைஞ்சித் திருமூலநாயனார் மூவாயிரவருடம் தவம்புரிந்த திருவாவடுதுறை அணுகி மாசிலாமணியீசரையும், செம்பொற்றியா கேசரையும் பணிந்து மடாலய மகாசந்நிதானத்தையும் தொழுது சோழநாட்டு யாத்திரையை முடித்தன (72-முதல் 76-வரையில் பக்கங்காண்க)

சொர்க்கத்திலும்சிறந்து சூதம்பாடலம் வகுளம் மந்தாரம் தாதகி தமாலம பனசம் புன்னை புன்னாகம் மாதுளை சம்பகம் சந்தனம் சாலம் ஆகியவிருக்ஷங்களையுடைய சோலைகள் சூழப்பெற்றதாய் பாலாற்றின் நீர்வளமிகுதியால் வயல்வளம் குன்றாத பொலிவினையுடையதாய் தாமரைசெவ்வல்லி நீலோற்பல முதலிய மலர்கள் மலர்ந்து சங்கினங்கள் முழங்கி யீன்ற முத்துக்களை அலையினாற் கரையிற்கொண்டு சேர்க்கும் பரந்ததடாகங்களையுடையதாய் சந்திரன் றவழும் மணிகளிழைத்த மாடங்களையுடையதாய் மகாதோரணங்கள்கட்டிய பலகாதவரையில் நீண்டவீதிகள் பலவுள்ளனவாய் இவை முதலிய சிறப்புகள் வாய்ந்த திருக்காஞ்சிமாநகரையடைந்தோம்சர்வதீர்த்தம் இஷ்டசித்திதீர்த்தம்கம்பாநதிபம்பாநதி அரித்திராநதி வேகவதி க்ஷீரநதி பாகுநதிஇவ்வேழுநதிகளையும்விதிப்படியாடிக்கச்சியேகம்பமுதலிய நாலுலக்ஷத்துஐம்பதினாயிரம்ஸ்தலங்களையுந்தரிசித்தோம் எனத்திருப்தியடைந்தன. பின்னர் இவ்வாறேவிஷ்ணுஸ்தலயாத்திரையும்செய்யவேண்டுமென்றுகல்லாலவிருக்ஷங்கூறவடநாடுகொஞ்சிநிற்க தொண்டைநாடு மகதநாடு மலைநாடு பாண்டிநாடு சோழநாடு இந்நாட்டுத்திவ்ய தேசயாத்திரைசெய்து காஞ்சீபுரியை யடைந்து அங்குள்ளவிஷ்ணுஸ்தலயாத்திரையும் பூர்த்திசெய்து மறுபடியும் விஷ்ணுவாழும் புராணஸ்தலங்களையும் சேவித்துக் காஞ்சிபுரியையடைந்து ஸ்ரீஏகாம்பரநாதர் பிர்ம்மோச்சவத்தையுக்தரிசித்துத் தானங்களையீந்து எம்மையாளுடைய ஏகாம்பரநாதருக்கு அபிஷேகதூபதீப நைவேத்திய அலங்கார தீபாராதனைகளைச்செய்வித்து தரிசனஞ்செய்தன. இங்ஙனம்அனந்தங்கோடிவிருக்ஷங்களின்மனம்ஒருவழிப்பட்டு மகத்தாகிய தவஞ்செய்யக்கண்டு எம்பெருமான் தரிசனங்கடாக்ஷித்துப் பொன்மரமொன்றே சர்வவிருக்ஷங்களையாளும்படி விருக்ஷகோடிகள் கேட்டுக்கொண்டபிரகாரம் வரம் ஸ்ரீ ஏகாம்பரநாதர் கிருபைசெய்தனர். தேவர்கள்புஷ்பமாரி பொழிந்து வாழ்த்தினார்கள் வாழியும் மங்களமும்பாடலாயிற்று.

திருச்சிற்றம்பலம்.



**திருஞான சம்பந்த மூர்த்திசுவாமிகள் தேவாரம்.**

" மண்ணினல்லவண்ணம் வாழலாம்வைகலு
மெண்ணினல்லகதிக்கியாதுமோர்குறைவிலைக்
கண்ணினல்லஃதுறுங் கழுமலவளநகர்ப்
பெண்ணினல்லாளொடும் பெருந்தகையிருந்ததே."

" என்ன புண்ணியஞ் செய்தனை நெஞ்சமே யிருங்கடல் வையத்து
முன்னை நீபுரி நல்வினைப் பயனிடை முழுமணித் தரளங்கண்
மன்னு காவிரி சூழ்திரு வலஞ்சுழி வாணனை வாயாரப்
பன்னி யாதரித் தேத்தியும் பாடியும் வழிபடு மதனாலே "

" வாழ்கவந்தணர்வானவரானினம்
வீழ்கதண்புனல் வேந்தனுமோங்குக
ஆழ்கதீயதெல்லாமரனாமமே
சூழ்கவையகமுந்துயர்தீர்கவே. "

திருச்சிற்றம்பலம்.

---

இச்சரித்திரத்தை வசனநடையில்எழுத வேண்டுமென்று சென்னை சூளை சாமிப்பிள்ளைவீதியில் வசிக்கும் காஞ்சீபுரம் பஞ்சுப்பேட்டை வீராசாமிமுதலியாரவர்களும்,சென்னைநகர் முன்சிபல்ஆபீசு அக்கவுண்டெண்ட் செங்கற்பட்டுரத்தம் மாணிக்கப்பமுதலியாரவர்களும், சென்னை வேப்பேரி இந்து ஆயுள்வேத அவிழ்தசாலைத்தலைவர் பா-சுப்பிரமணியமுதலியாரவர்களும் கொண்டவிருப்பத்தின்படி இந்நூலாசிரியர் கருத்தினைத்தழுவி இவர் புத்திரரும் சென்னை மிலிடெரிஅகவுண்ட்ஸ் சப்ளை அண்டு டிராஸ்போர்ட் எக்ஜாமினர் ஆபீசில் கிளார்க்குமாகிய செங்கற்பட்டுரத்தம் சம்பந்தமூர்த்திமுதலியாரால் சங்கிரகமாகத் தொகுத்தெழுதலாயிற்று.

பொன்மரத்து நாடக சரித்திரம்
முற்றுப்பெற்றது.

---

**ஸ்ரீநடராஜர் அபிடேகம் ஆறுக்கும் விபரம்.**

" சித்திரைவோணம் சிரானி உத்திரம்
அத்தகுமார்கழி ஆதிரை ஆவணி
ஒத்தகும்பம் கன்னி உயர் பதினான்கினும்
சித்தம் சிதம்பரம் சிறந்தநீராடலே "

**சிவபெருமானுக்குச் சித்திரை முதலாக் மாதவபிடேகத்திரவியங்கள்.**

" கொழுந்து சந்தனம் கூறியமுப்பழம்
அழுந்துபால் சர்க்கரை பணியாரமே
தழைந்த வன்னம் தழல் நெய் யொழுகுதேன்
விழைந்த நெய்பொதி கம்பளம் வெண்தயிர் "

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# மூவர் - தேவாரம்பெற்ற சிவக்ஷேத்ரங்கள் உ௱ச - க்கு

# அ ட் ட வ ணை.

வடநாட்டில்-ரு.
திருநொடித்தான்மலை
என்னும்ஸ்ரீகைலாயம்.
திருக்கேதாரம்
,, அநேகதங்காவதம்
,, இந்த்ரநீலபருப்பதம்
,, குலவுபருப்பதம் இது மல்லிகார்ச்சுனம்.
என்னும்ஸ்ரீசைலம்.
துளுவநாட்டில்-க.
திருக்கோகரணம்.
தொண்டைநாட்டில் ௬உ
காஞ்சீபுரத்தில்
திருஏகம்பம்
,, மேற்றளி
,, ஓணகாந்தன்றளி
,, அநேகதங்காவதம்
,, நெறிக்காரைக்காடு
,, குரங்கணின்முட்டம்
,, மாகறல்
,, ஒத்தூர்
வன்பார்த்தான் பனங்காட்டூர்
திருவல்லம்
,, மாற்பேறு
,, ஊறல்இது தக்கோலம்
,, இலம்பையங் கோட்டூர்
,, விற்கோலம் இது கூவம்
,, ஆலங்காடு
,, பாசூர்
,, வெண்பாக்கம்
,, கள்ளில்
திருக்காளத்தி
,, ஒற்றியூர்
,, வலிதாயம் இதுபாடி
,, முல்லைவாயில்
,, வேற்காடு
,, மயிலை
,, வான்மியூர்
,, கச்சூர் ஆலக்கோயில்
,, இடைச்சுரம்
,, கழுக்குன்றம்
அச்சிறுபாக்கம்
திருவக்கரை
,, அரசிலி ஒழிந்தியப்பட்டு
,, இரும்பைமாகாளம்.
நடுநாட்டில்-உஉ.
இது மகதநாடு
திருவரத்துறை
,, தூங்கானைமாடம்
,, கூடலையாற்றூர்
,, எருக்கத்தம்புலியூர்
,, திணைநகர்
,, சோபுரம்
,, அதிகை
,, நாவலூர்
,, முதுகுன்றம் இது விருதாசலம்
திருவெண்ணெய்
,, கோவலூர்
அறையணிநல்லூர்
இடையாறு
,, வெண்ணெய்நல்லூர்
,, துறையூர்
,, வடுகூர்
,, மாணிக்குழி
,, பாதிரிப்புலியூர்
,, முண்டீச்சுரம்
புறவார்பனங்காட்டூர்
திருவாமாத்தூர்
,, அண்ணாமலை
கொங்குநாட்டில்-எ.
அவிநாசி
திருமுருகன்பூண்டி
,, நணா இதுபவானி
,, செங்குன்றூர்
வெஞ்சமாக்கூடல்
திருபாண்டிக்கொடுமுடி
,, கருவூர்
பாண்டிநாட்டில்-கச.
திருவாலவாய் இது மதுரை
,, ஆப்பனூர்
திருப்பரங்குன்று
திருவேடகம்
கொடுங்குன்றம்
,, புத்தூர்
திருப்புனவாயில்
இராமேச்சுரம்
திருஆடானை
,, கானப்பேர் இது காளையார் கோவில்
திருப்பூவணம்
,, சுழியல்
,, குற்றாலம்
திருநெல்வேலி
ஈழநாட்டில்-உ.
திருக்கோணமாமலை
,, கேதீச்சரம்
மலைநாட்டில் - க.
திருவஞ்சைக்களம்.

சோழநாட்டில் கஅ௦.
இதில் காவிரிக்கு வட
கரையில் சுஈ.
கோயில் இதுசிதம்பரம்
திருவேட்களம்
,, நெல்வாயில்
,, கழிப்பாலை
,, பெருமணம்
,, மயேந்திரப்பள்ளி
,, முல்லைவாயில்
,, கலிக்காமூர்
,, சாய்க்காடு
காவிரிப்பூம்பட்டினம் இது திருபல்லவனீச்சுரம்
,, வெண்காடு
,, காட்டுப்பள்ளி
குருகாவூர்
சீர்காழி
திருக்கோலக்கா
புள்ளிருக்கும்வேளூர் இதுவைத்தீஸ்வரன்கோயில்
கண்ணார்கோயில்
திருக்கடைமுடி
,, நின்றியூர்
,, புன்கூர்
,, நீடூர்
,, அன்னியூர்
,, வேள்விக்குடி
,, எதிர்கொள்பாடி
,, மணஞ்சேரி
,, திருகுறுக்கை
,, கருப்பறியலூர்
,, குரக்குக்கா
,, வாளொளிபுற்றூர்
,, மண்ணிபடிக்கரை
,, ஓமாம்புலியூர்
,, கானாட்டுமுள்ளூர்
,, திருநாரையூர்
,, கடம்பூர்
,, பந்தணைநல்லூர்
,, கஞ்சனூர்
,, கோடிகா
,, மங்கலக்குடி
திருப்பனந்தாள்
திருவாப்பாடி
திருச்சேய்ஞலூர்

திருந்துதேவன்குடி
திருவியலூர்
,, கொட்டையூர்
,, இன்னம்பர்
,, புறம்பயம்
,, விசயமங்கை
,, வைகாவூர்
,, வடகுரங்காடுதுறை
,, பழனம்
,, ஐயாறு
,, நெய்த்தானம்
,, பெரும்புலியூர்
,, மழபாடி
,, பழுவூர்
,, கானூர்
,, அன்பிலாலந்துறை
,, மாந்துறை
,, பாற்றுத்துறை
,, ஆனைக்கா
,, பைஞ்ஞீலி
,, பாச்சிலாச்சிராமம்
,, ஈங்கோய்மலை
காவேரிக்குத்தென்
கரையில் - கஉஎ.
திருவாட்போக்கி என்பது இரத்தினகிரி.
,, கடம்பந்துறை
,, பராய்த்துறை
,, கற்குடி
,, மூக்கீச்சரம் எ-து
உறையூர்
,, சிராப்பள்ளி
,, எறும்பியூர்
,, நெடுங்களம்
மேலைக்காட்டுப்பள்ளி
,, ஆலம்பொழில்
,, பூந்துருத்தி
,, திருக்கண்டியூர்
,, சோற்றுத்துறை
,, வேதிகுடி
,, தென்குடித்திட்டை
,, புள்ளமங்கை
,, சக்கரப்பள்ளி
,, கருகாவூர்
,, பாலைத்துறை
,, நல்லூர்

திருஆவூர்பசுபதீச்சரம்
,, சத்திமுற்றம்
,, பட்டீச்சரம்
,, பழையாறை
,, வடதளி
,, வலஞ்சுழி
,, குடமூக்கு எ-து
,, கும்பகோணம்
,, குடந்தைக் கீழ்கோட்டம்
,, குடந்தைக் காரோணம்
,, நாகேச்சுரம்
,, விடைமருதூர்
,, தென் குரங்காடுதுறை
,, நீலக்குடி
,, வைகன் மாடக்கோயில்
,, நல்லம்
,, கோழம்பம்
,, ஆவடுதுறை
,, துருத்தி எ-து குற்றாலம்
,, வேழுந்தூர்
,, மயிலாடுதுறை எ-து
மாயூரம்
,, விளநகர்
,, பறியலூர்
,, செம்பொன்பள்ளி
,, நனிபள்ளி
,, வலம்புரம்
,, தலைச்சங்காடு
,, ஆக்கூர்த்தான்றோன்றிமாடம்
,, கடவூர்மயானம்
,, வேட்டக்குடி
,, தெளிச்சேரி
,, தருமபுரம்
,, நள்ளாறு
,, கோட்டாறு
,, வம்பர்ப்பெருந்திருக்
கோயில்
,, அம்பர்மாகாளம்
,, மீயச்சூரிளங்
கோயில்

,, திலதைப்பதி
,, பாம்புரம்
,, சிறுகுடி
,, வீழிமிழலை
,, வன்னியூர்
,, கருவிலி
,, பேணுபெருந்துறை
,, நறையூர்ச்சித்தீச்சரம்
,, அரிசிற்கரைப்புத்தூர்
,, சிவபுரம்
,, கலயநல்லூர்
,, கருக்குடி
,, வாஞ்சியம்
,, நன்னிலத்துப் பெருங்கோயில்
,, கொண்டீச்சரம்
,, பனையூர்
,, விற்குடி
,, புகலூர்
,, புகலூர்வர்த்தமானீச்சரம்
,, இராமனதீச்சரம்
,, பயற்றூர்
,, செங்காட்டங்குடி
,, மருகல்
,, சாத்தமங்கை
,, நாகைக்காரோணம்
,, சிக்கல்
,, கீழ்வேளூர்
,, தேவூர்
,, பள்ளியின்முக்கூடல்
,, ஆரூர்
,, ஆரூர்அறநெறி
,, ஆரூர்ப்பரவையுண்மண்டளி
,, விளமர்
,, கரவீரம்
திருப்பெருவேளூர்
,, தலையாலங்காடு
,, குடவாயில்
,, சேறை
,, நாலூர்மயானம்
,, கடுவாய்க்கரைப்புத்தூர்
,, இரும்பூளை
,, வரதைப்பெரும்பாழி
,, அவணிவணல்லூர்
,, பருதிநியமம்
,, எண்ணியூர்
,, பூவனூர்
,, பாதாளிச்சரம்
,, களர்
,, சிற்றேமம்
,, உசாத்தானம்
,, இடும்பாவனம்
,, கடிக்குளம்
,, தண்டலைநீணெறி
,, கோட்டூர்
,, வெண்டுறை
,, கொள்ளம்பூதூர்
,, பேரெயில்
,, கொள்ளிக்காடு
,, தெங்கூர்
,, நெல்லிக்கா
,, நாட்டியத்தான்குடி
,, காறாயல்
,, கன்றாப்பூர்
,, வலிவலம்
,, கைச்சின்னம்
,, கோளிலி
,, வாய்மூர்
,, மறைக்காடு எ-து வேதாரணியம்
,, அகத்தியான்பள்ளி
,, கோடிக்குழகர்

* காசி. நஞ்சண்டகூடல் திருப்பெருந்துறை உத்தரகோசமங்கை மேலைச்சிதம்பரம் முதலிய க்ஷேத்திரங்களுக்கு இப்போது பதிகம் யில்லாமையால் இதில் சேர்க்கப்படவில்லை.

மதுராந்தகம் தாலூகா ஏறுபாக்கத்தில் ம-௱-௱-ஸ்ரீ. முத்துகுமாரசாமி முதலியாரவர்கள் பங்களாவில் பொன்மரத்து நாடகம் அரங்கேற்றல் நடந்ததைப்பற்றி அடுத்தகிணர் கிராமம் குமாரசுவாமி சிவாசாரியார் அவர்கள் இயற்றிய கவி.

உலகெலாந்தமதுறைவிடமாகவுடைய பொன்மரத்துநாடகத்தை
இலகியவேறைமுத்துக்குமாரசாமி மாலினியமாளிகையிற்
கலியையாயிரத்து மூன்றினிற் பிலவகருது தைமதி பதினெட்டில்
அலகினத்தம் பொன்னம்பலப் புலவனணியரங்கேற்றினனுமால்.

குருவணக்கம்.

அண்ணன்மாமதுரை ஞானசம்பந்த ராதீனந்தன்னிலே வித்வான்
எண்ணருந்திருச்சிற்றம்பல குருவினிணையடியிறைஞ்சியேஞால
நண்ணும்பொன்மரத்து நாடகநவின்றேன் நன்குணர்ந்தோர்கள்நாடோறும்
புண்ணியமிருந்தே சிவமுணர்ஞானம் பொருந்தியிப்புவியில்வாழ்குவரால்.

# அறுபத்துமூவர்களுடைய திருநாமமுதலியவற்றைக் காட்டும் அட்டவணை.



திருமரபும் திருநாமமும். — திருவவதாரவூர் அல்லது வசித்தவூர் — திருத்தொண்டின்முக்கியமான விஷயம் — முத்திபெற்ற வகை.

ஆதிசைவர்நால்வர்.

சுந்தரமூர்த்திசுவாமிகள்-திருநாவலூர் - சமயகுரவர்.

சடையநாயனார் ஷை ஷையார் பிதா.

இசைஞானியார் ஷை ஷையார்மாதா.

புகழ்த்துணைநாயனார்-திருப்புத்தூர் - அல்லும்பகலும் சிவபெருமானை விதிப்படிபூசித்துப் படிக்காசுபெற்றவர். சி.

பிராமணர் பன்னிருவர்.

குங்குலியக்கலயநாயனார்-திருக்கடவூர் - மங்கலியங்கொடுத்துக்குங்குலியங் கொண்டவர் ஆளுடையபிள்ளையார் ஆளுடைய அரசு இவர்கட்குத்திருவமுது செய்வித்துத் திருவருள்பெற்றவர். சி.

முருகநாயனார் - திருப்புகலூர் - சரியையும் ஸ்ரீபஞ்சாக்ஷரஜெபமுஞ்செய்தவர் இவர்மடத்துக்கு ஷை சமயகுரவரிருவரும் திருநீலநக்கநாயனாரும் சிறுத்தொண்டநாயனாரும் எழுந்தருள திருவமுதுசெய்வித்தவர் சி.

உருத்திரபசுபதிநாயனார் - திருத்தலையூர் - ஸ்ரீ ருத்திரத்தை ஓதினவர் சி.

சண்டேஸ்வரநாயனார் - திருச்சேய்ஞலூர் - தந்தையைத்தடிந்தவர் சி.

அப்பூதியடிகள்நாயனார் - திங்களூர் - திருநாவுக்கரசு சுவாமிகள் பேரால் திருமடங்கள் முதலிய செய்தவர். கு.

திருநீலநக்கநாயனார் - சாத்தமங்கை - ஆளுடையபிள்ளையார் திருவடிகளைத் தியானஞ்செய்தவர் சி.

நமிநந்தியடிகள்நாயனார் - ஏமப்பேர் - தண்ணீரால்விளக்கெரித்தவர் திருவாரூரில் பிறந்தவர்கள் எல்லாம் சிவகணங்களெனக்கண்டவர் ஆளுடைய வரசால் பதிகத்தில் பாடப்பட்டவர். சி.

திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் - சீர்காழி - சமயகுரவர் கு.

சோமாசிமாறநாயனார் - அம்பர்நகர் - ஆளுடையநம்பி திருவடிகட்குப்பத்தி செய்தவர் கு.

சிறப்புலிநாயனார்-திருவாக்கூர்-சிவனடியார்கட்குத்திருவமுதுசெய்வித்தவர் சி.

கணநாதர்நாயனார் - சீர்காழி - ஆளுடைபிள்ளையாரைப் பூசித்தவர். கு.

பூசலார்நாயனார் - திருநின்றவூர் - இருதயத்தில் கோவில்கட்டினவர் சி.

மாமாத்திரப்பிராமணர்.

சிறுத்தொண்டநாயனார்-செங்காட்டங்குடி-மைந்தனைக்கறிசமைத்தளித்தவர் அ.

க்ஷத்திரியர் அறுவர். சேரமான்பெருமான்நாயனார் - கொடுங்கோளூர்-ஆளுடையநம்பிக்குநண்பர் குதிரைமீதேறிக்கைலைசேர்ந்தவர் சி.

புகழ்ச்சோழநாயனார் - திருக்கருவூர் - அடியார்தலைக்குத்தீங்குசெய்ததாய்த் தீயில் மூழ்கினவர் அ.

நெடுமாறநாயனார் - மதுரை - இவர்கூன்பாண்டியர் ஆளுடையபிள்ளையாரால் கூன்நிமிர்ந்தருளப்பெற்றவர் கு.

மங்கையர்க்கரசியார் - மதுரை - மேற்படி பாண்டிப்பிராட்டியார் இவர்சைவசமயந் தழைத்தோங்க வந்தவர் கு.
இடங்கழிநாயனர் - கொடும்பாளூர் - பொக்கிஷங்களை அடியார்களுக்குக் கொள்ளையிட்டவர் அ.
கோச்செங்கோட்சோழநாயனர் உலகமெலாஞ் சிவாலயப்பிரதிஷ்டை செய்தவர் சி.
குறுநிலமன்னர் ஐவர்.
மெய்ப்பொருணயனர் -திருக்கோவலூர் - அடியார்வேடம்பூண்டுவந்த பகைவன்வாளால் மகிழ்ந்துயிர் துறந்தவர் அ.
கூற்றுவநாயனர் - களந்தை - சபாநாயகர் திருவடிகளையே முடியாகச்சூடி உலகாண்டவர் சி.
நரசிங்கமுனையரையநாயனர்-திருமுனைப்பாடிநாடு-விபூதியே பெருஞ்செல்வமென அறிந்து அடியார்க்கன்புசெய்தவர் அ.
ஐயடிகள்காடவர்கோன்நாயனர்-காஞ்சீபுரம்-சைவசமயந்தழைத்தோங்க அரசியற்றிக்ஷேத்ரவெண்பாபாடினவர் சி.
கழற்சிங்கநாயனர் - இவருடையதேவியார் சிவாலயத்துப் பூவை முகந்ததாகக் கையைத்துணித்தவர் சி.
வைசியர் ஐவர்.
இயற்பகைநாயனர் - காவிரிப்பூம்பட்டினம் - காதலியைக்கொடுத்தவர் அ.
அமர்நீதிநாயனர்-பழையாறை-கோவணநேர்தனைநிறுத்துக்கொடுத்தவர் அ.
மூர்த்திநாயனர் - மதுரை - விபூதிருத்திராக்ஷம் சடைமுடியோடு அரசாக்ஷி செய்தவர் சி.
காரைக்காலம்மையார் - காரைக்கால் - சிரசால்நடந்து நடனங்கண்டு மூத்த திருப்பதிகஞ்செய்தவர் அ.
கலிக்கம்பநாயனர் - கடந்தைநகர் - அடியார்திருவடிவிளக்க கரகநீர்வாராத மனைவிகையைத்தறித்தவர் அ.
வேளாளர் பதின்மூவர்.
இளையான்குடிமாறநாயனர்-இளசை-நென்முளைவாரி யின்னமுதளித்தவர் அ.
விறன்மிண்டகண்டநாயனர்-திருச்செங்குன்றூர்-திருத்தொண்டத்தொகையருள்புரிய காரணமாகவிருந்தவர் அ.
மானக்கஞ்சாறநாயனர்-கஞ்சாறு-மணப்பெண்கூந்தலையரிந்துகொடுத்தவர் அ.
அரிவாட்டாயநாயனர்-கணமங்கலம்-பூட்டியரிவாளூட்டியரிந்தவர் சி.
திருநாவுக்கரசுசுவாமிகள் - திருவாமூர் - சமயகுரவர் கு.
ஏயர்கோன்கலிக்காமநாயனர் - பெருமங்கலம் - இவர்வன்றொண்டர்பேரில் கோபித்து வயிற்றைக்கிழித்துக்கொண்டிறந்தனர் சி.
மூர்க்கநாயனர்-திருவேற்காடு - சூதாடிவரும்பொருளால் அடியார்க்குத்திருவமுதுசெய்வித்தவர் அ.
சாக்கியநாயனர்-சங்கமங்கை-காஞ்சியில்மறவாது கல்லெறிந்தவர் சி.
சத்திநாயனர்-வரிஞ்சியூர்-அடியாரையிகழ்ந்தவருடைய நாவையரிந்தவர் அ.
வாயிலார்நாயனர் - திருமயிலை - ஞானபூசைசெய்தவர் சி.

முனையடுவார்நாயனார் - நீடூர் - சமர்செய்துவரும்பொருளால் அடியார்க்கமுதளித்தவர் அ.
செருத்துணைநாயனார்-தஞ்சை-பூக்கொளுமாதர்மூக்கினையரிந்தவர் சி.
கோட்புலிநாயனார்-நாட்டியத்தான்குடி - நெல்லைச்செலவழித்தகுற்றத்திற்காகச் சுற்றங்களைந்தவர் சி.
கோபாலரிருவர். திருமூலநாயனார்-சாத்தனூர்-நூதனவுடல் தவஞ்செய்து நூதன திருமந்திரஞ்செய்தவர் கு.
ஆனாயநாயனார்-மங்கலம்-பசுக்களைமேய்த்தவர் குழலிசையில்ஐந்தெழுத்துங் குழையவைத்தூதினவர். சி.
வேட்கோவர்.
திருநீலகண்டநாயனார்-தில்லை-இளமுலைமாதர்வளமைதுறந்தவர் அ.
பாணர். திருநீலகண்டத்துயாழ்பாணநாயனார்-திருவெருக்கத்தம்புலியூர் - ஆளுடையபிள்ளையாருக்கு யாழ்வாசித்தவர் கு.
பரதவர். அதிபத்தநாயனார்-நாகப்பட்டினம் - அகப்படுமணிமீன் அரற்கென விடுத்தவர் சி.
வேடர். கண்ணப்பசுவாமிகள்-உடுப்பூர்- திருக்காளத்தியப்பருக்குத்தன்கண்ணையப்பினவர். சி.
சான்றார். ஏனாதிநாயனார்-எயினனூர்-பகைவனுடைய நெற்றியில் திருநீறு சாத்தியிருக்கக்கண்டு மருண்டு உயிர்துறந்தவர் அ.
சாலியர். நேசநாயனார் -கோக்காம்பீலி - அடியார்களுக்கு உடைகோவணங் கொடுத்தவர் அ.
செக்கார். கலியநாயனார்-திருவொற்றியூர்-திருவிளக்கேற்ற எண்ணெய்க்குப் பதிலாகத்தமதுஇரத்தத்தைநிறைக்கும்பொருட்டுக்கழுத்தையரிந்தவர் சி.
ஏகாலியர். திருக்குறிப்புத்தொண்டநாயனார்-காஞ்சீபுரம் - தலையையுடையொலிக்குஞ் சிலையில்மோதினவர் அ.
தீண்டாத்திருமேனி. திருநாளைப்போவார்நாயனார்-ஆதனூர்- தீயில்மூழ்கிப் பிராமணமுனிவடிவங்கொண்டெழுந்தவர் சி.
திருமரபுதெரியாதவர் அறுவர்.
எறிபத்தநாயனார்-திருக்கருவூர்-திருப்பூங்குடையைச்சிதறின மதவானையைக்கொன்றவர் சி.
குலச்சிறைநாயனார் - மணமேற்குடி - நெடுமாறபாண்டியராஜனுக்கு முதல் மந்திரி சமணரைக்கழுவிலேற்றினவர் கு.
பெருமிழலைக்குறும்பநாயனார் -பெருமிழலை - பரமயோகிபரவைத்துணைவர் திருவடியில்பூஜித்தவர் கு.
தண்டியடிகணாயனார்-திருவாரூர்-திருக்குளம்வெட்டி கண் பெற்றவர் சி.
கணம்புல்லநாயனார்-இருக்குவேளூர்-முடிவிளக்கெரித்தவர் சி.
காரிநாயனார்-திருக்கடவூர்-சிவாலயங்கள் பலவற்றைக்கட்டிவைத்தவர் சி.

---

முத்திபெற்றவகையில் அ. என்பது அடியாரைவழிப்படும். கு. என்பது குருவருளாலும். சி. என்பது சிவலிங்கத்தாலும். முத்தியடைந்ததாகக்குறிப்பு.

சண்டேஸ்வரநாயனார்-பிரமசாரி, மூர்த்திநாயனாரும்-திருநாவுக்கரசுசுவாமிகளும் துறவறம். மற்றவர்கள் இல்லறம்.

# சாத்துகவிகள்.

தஞ்சைமாநகரம் பிரம்மஸ்ரீ சதாவதானம். சுப்பிரமணிய ஐயரவர்கள்
இயற்றிய சிறப்புக்கவி நேரிசைவெண்பா.

பொன்மரத்தைநாடகத்திற் பூத்துமணங்கமழ்ந்து
நன்மையுறநாட்டித்தன்னாமத்தின்றன்மையினாற்
பொன்னம்பலங்கொண்டான் போற்றும்புகழ்நத்தப்
பொன்னம்பலவேள்புனைந்து.

சென்னை கிறிஸ்தியன் காலேஜ் தலைமைத் தமிழ்ப்பண்டிதர் வி. கோ. சூரிய
நாராயண சாஸ்திரியார் அவர்கள்பி-ஏ-சொல்லியது. நேரிசைவெண்பா.

பொன்னம்பலக்கவிஞன் பொன்மரத்துநாடகத்தைப்
பொன்னம்புலவர்புகழுமா — வின்னிசைப்பைஞ்
செந்தமிழிற்பாடினான்சீர்சாலினமினத்தை
வந்தினிதுசேருமதி.

அஷ்டாவதானம்பூவை-கலியாணசுந்தர முதலியாரவர்கள் இயற்றியஇரட்டை
அறுசீர் விருத்தம்.

வலனோங்குமுயர்செங்கை மாநகர்சார்நத்தத்தில்வதிந்தபுண்ய
மகிபன்வெங்கடாசலமால் முனியம்மைதவப்பயனாய்மகியில்வந்து
புலனோங்குகருணைபொறை யீகைதயைநிறைஞானம்பொற்பின்வாய்ந்த
புகழ்பொன்னம்பலக்கவிஞன் புலவரெலாநனிவியந்துபூரித்தென்று
நலனோங்குதேவாரத்தலசரித மாதியவாநாடித்தேர்வா
னயமனைத்துமேயமைந்த பொன்மரத்துநாடகத்தைநல்கக்கண்டு
தலனோங்குநேத்தப்பாக்கத்திலுதித்திடுசீமான் றனதனேர்வான்
றருமமுனிசாமிவள்ளலச்சிட்டிங்கி யாவருக்குந்தந்தான்மாதோ.

திருமயிலைசண்முகம்பிள்ளையவர்கள்பாடியஅறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பரத்துநாடகம்புலியும்பதஞ்சலியுங்கண்டு பவந்தீர்ந்தார்சொன்ன
மரத்துநாடகஞ்சொற்றான்செங்கல்வ நகர்நத்தமருவிஞானத்
திரத்துநாடகம்வாய்ந்த பொன்னம்பலப்புலவன் றேரினீண்டென்
றரத்துநாடகமொழியுந்தரத்தேயோ வதன்சீர்தரணிக்கம்மா.

முத்தமிழ்ரத்தினகரம், சைவஸ்ரீ. ம. தி. பாநுகவி அவர்களால்இயற்றப்பட்ட
அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

ஆடகமாதருவின்மேலாய்ந்தொருநாடகமதனையகிலமெச்சப்
பாடலமைவோடியற்றிப்புகழ்பெற்றான்பாரதனிற்பானற்போதி
னேடவிழுநெடும்புயத்துவேங்கடாசலமீன்றவியல்பின்மிக்க
பீடமைபொன்னம்பலவனென்றெவரும்பேசுமெழிற்பெரியோன்றானே.

வெண்பாப்புலி. தி. சு. வேலுசாமிப்பிள்ளையவர்களியற்றிய
நேரிசைவெண்பா.

சுத்தத்தான்மேயசுகுணத்தான்றூயவையுள்
சித்தத்தான்சீர்குலவுஞ்செங்கைநகர்-நத்தத்தான்
பொன்னம்பலவேள்செய்பொன்மரத்துநாடகத்தா
மின்னம்பலவரம்பைமா.

காஞ்சிபுரம் மஹாவித்வான் நமச்சிவாய முதலியார் அவர்கள் புத்திரர்
வித்வான் கந்தசாமிமுதலியார் அவர்கள் இயற்றிய
எழுசீர்க்கழிநெடிலடிபாசிரியவிருத்தம்.

பூமலிதருபொன்மரத்துநாடகத்தைப்பூமணங்கமழ்தரவியற்றித்
தூமலிபுலவோர்சொற்சுவையின்றேன்றுய்த்திடநன்களித்தனனல்
தேமலிபொங்கர்ச்செங்கைமாநகரிற்றிகழ்தருநத்தத்துள்வாழ்வோன்
பாமலிவேளாண்குலத்தினன்பொன்னம்பலமெனும்பாவலரேறே.

அஷ்டாவதானம். பூவை. கலியாணசுந்தர முதலியாரவர்கள் மாணாக்கரும் சென்னைபுரசை நேத்தப்பாக்கம் முனிசாமி முதலியரர் அவர்கள் இந்துதரும பாலிகா பாடசாலை தமிழ்ப்பண்டிதருமாகிய பாலூர் வேலு தேசிகரவர்கள் இயற்றிய ஆசிரியப்பா.

திருவார்கமலச்செழுமலர்வாவி, மருவார்சோலைமதியூர்மாடம்
மதியோர்முகத்தார்மாதரிடையுறு,சதிரார்வீதித்தனிநகர்செங்கற்
பட்டினினத்தம்பண்புறவாழ்வோன், மட்டிலாச்சீர்த்தியன்மன்னவர்நண்பன்
சகரர்க்கருள்செயுஞ்சானவிமரபோன்புகரிலாமனத்தோன்புண்ணியமேனியன்
பொன்னம்பலப்பேர்புனிதமார்புலவன்,பொன்மரநாடகம்புகன்றனனதனைத்
தேவருலகும்புகழ்தருசீர்சால்,மாவருசென்னைமாநகர்ப்புரசை
வாழ்வுறும்வள்ளல்வன்சீர்த்தியினான்,போழ்வுறமதியம்புனைசடையண்ணல்
அடியரைத்தேடியகங்களித்தவரே, படிமுதல்யாவும்படைத்தளித்தழிக்கும்
சிவனென்றேயெணீஇச்செய்கடனியற்றிப், பவனத்தோர்வரப்பற்றமுதூட்டி
விரும்பியபொருளெலாம்வேலையாயீய்வோன், சுரும்பிமிர்குவளைத்தோளணிப்
புண்ணியன்,காஞ்சிப்பதியுறுங்காமாக்ஷியம்மை,வாஞ்சித்தகோட்டம்வரைவிலா
த்தீபம், வைத்தருச்சனையெலாம்வரன்முறையியற்றிப், புத்தமுதோர்சுவைப்
போனகமட்டிலா,வநேகருக்குதவுமரும்புண்ணியவான், மனோவொருப்பாட்டி
னின்மாட்சிமிக்கவான், சம்புறைபதியெலாந்தணீர்க்குழைவைத்தே, உம்பரு
ம்புகழேத்துலகுபகாரன், நேத்தப்பாக்கமாநீள்பழம்பதியினான், பூத்தசீர்க்கரு
ணைப்பொலிமலர்முகத்தினன். முருகேசப்பெயர்முழுப்புண்ணியனைத், தரை
மிசைத்தம்பியாய்த்தான்கொளுந்தூயோன், முனிசாமிப்பெயர்முழங்குகெம்பீ
ரன், இனிமையாய்மகிழ்ந்தேயிவ்விரும்புவியோர், எவர்க்குஞ்சிவனருளினி
மையாய்விளைய, துவர்ப்பவமிலாப்பொருட்டொகைத்தயைசெய்து
அச்சிற்பதிப்பித்தரங்கேற்றுவித்தான்,இச்சகதலத்தோரின்புற்றனரே.

காஞ்சிபுரம். பிள்ளையார் பாளையம் மணிகண்டமுதலியார் குமாரர் வித்வான் திருவேங்கடமுதலியார் அவர்கள் இயற்றிய ஆசிரியப்பா.

மலர்தலையுலகிற்பலர்புகழ்தரவரு, மனமுதற்றத்துவவினவனத்தருக்கள்
வருந்தியவொழிக்கப்பொருந்தியவினவிப், பூரணவறிவெனுங்காரணவரும்
மரத்திற்கரசியல்வரத்திற்புனைதரப், புண்ணியதீர்த்தநண்ணியமுழுகி [பொன்
யாரூர்முதலாம்பேரூரெனவொளிர், மூலாதாரமேலாதார [ரப்பா
மெங்கணும்புகுந்துதெய்வங்களைப்பணிந்து, திரவொளிதருமொருபரவெளிப்ப

மிறுதிவருபொழுதுறுதிதரவுயர், கச்சியம்பதிதனின்மெச்சியங்குவப்பி னிருந்துமெய்த்தவந்திருந்தப்புரிந்தே,கம்பனருளவுநம்புறுமின்பம் பெற்றதென்றகமுகத்துற்றதைப்புறம்பி, னுளவாவுரைத்தனனுளவாறுண்ர வாடகமரத்துநாடகமெனவே,திருமகள்கொழுனன்றிருமகளொடுவளர் செங்கற்பட்டுச்செங்கணத்தம்,திகழ்வெங்கடாசலப்புகழ்வேண்டியவன் புத்திரனறிஞர்மித்திரன், பொன்னம்பலமெனும்பொன்னம்பலமே.

மதுரைஜில்லாமுறையூர் மகாசனம்பொருந்தியஸ்ரீமான்பழ-சி சண்முகஞ் செட்டியாரவர்கள் சமுகவித்வான் கொட்டாம்பட்டி எம். கருப்பையாப்பாவலர் அவர்கள் இயற்றிய. நேரிசைவெண்பா.

நாடகமெல்லாமிதுபோனுங்கண்டதில்லையென
நாடகத்திற்பொன்மரத்துநாடகத்தைப்-பாடகத்து
மன்னம்பலபுலவர் மாமகிழ்வாய்க்கொள்ளநந்தம்
பொன்னம் பலம்புகன்றான்போந்து.

கட்டளைக்கலித்துறை.

மன்னம்பலந்தனிலுடகமாடும் வானருளாற்
பொன்னம்பலந்தரும் பொன்மரநாடகம்போந்துகற்றோர்க்
கின்னம்பலந்தப் பிறவியெய்தாததை யின்பொடுகொள்
கன்னம்பலந்தவம்பெற்றதுவாமிதுகண்கண்டதே.

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

தாங்குபுகழுறுமந்நாடகத்தைநாடகத்திற் றகைமைவாய்ந்து
பாங்குபெறக்கற்றுய்யும் படியச்சிற்பதிப்பித்துப்பலர்க்குமீந்தான்
வீங்குதனத்தினிற்றனதன்மிளிருமதன் றருமநெறிவிரும்பிச்செய்யும்
ஓங்குகனநியமமுளான் புரசைமுனிசாமியென்பேருடையான்மாதோ.



## வைணவம்.

சென்னை - கிரிஸ்டியன்காலேஜ் தமிழ்ப்பண்டிதர். கா. ஸ்ரீகோபாலாசாரியார் அவர்கள் இயற்றிய அறுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

சீராருஞ்செங்கல்வபுரிநத்தந்திழகவருஞ்செல்வனுளும்
பேராரும்பொன்னம்பலப்புலவன் புலவர்நயம்பேசவேணப்
பாராருங்களிகூரப்பொன்மரத்துநாடகத்தைப்பாடித்தந்தான்
நேராருநாடகமே நாடகமே நாடகமே நிலவத்தானே.

சென்னை. பிரெஸிடென்ஸிகாலேஜ். தமிழ்ப்பண்டிதர். பு மா ஸ்ரீநிவாசாசாரியார் அவர்கள் இயற்றிய நேரிசைவெண்பா.

நன்மனத்தோருண்மகிழ்ந்துநாடுஞ்சிறப்பேய்ந்த
பொன்மரத்துநாடகத்தைப்பூந்தமிழின்சொன்மணக்கப்
பாடித்தந்தான்செங்கற்பட்டுப்பொன்னம்பலவ
னீடுமெதியோனினைந்து.

செங்கற்பட்டு. யுனைடெட். பிரீசர்ச். மிஷன்ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர்,
ஐ. அரங்காசாரியாரவர்களியற்றியது.

வெண்பா.

பாடற்கெளிதாய்ப்பயனிற்பெரிதாகி
நாடுயர்ந்தபொன்மரமாநாடகத்தைப்-பீடுயர்ந்த
பொன்னம்பலனும் புகழ்வேளாளனூர்ந்தகுல
மன்னனுரைத்தான்மகிழ்ந்து.

சென்னை. வி. யஸ். யம். காலேஜ். தமிழ்ப்பிரதமபண்டிதர். வை. மு. சடகோப ராமானுஜாசாரியார். அவர்களால் இயற்றிய வசனம்.

செங்கற்பட்டுக்குஅடுத்தநத்தத்தில்வசிக்கும்ம-ா-ா-ஸ்ரீ பொன்னம்பலமுதலியாரவர்கள் இயற்றி வெளியிட்டபொன்மரத்துநாடகம்என்றஇத்தமிழ்நூல் என் பார்வைக்குவந்தது. உலகத்துப்பெரும்பாலார் எளியதென்று ஸாமான்யமாக நினைக்கும் மரமல்லிகை மரத்தினிடத்தில் சிற்சில அருமைபெருமைகளை மேற்குறித்த முதலியாரவர்கள் தமது முதிர்ந்த அநுபவத்திலே தாமாகக் கண்டனராதலால், அம்மரத்தை எங்கும் அபிவிருத்திசெய்து அதனால் உலகத்தைப்பெரிதும் பயன்படுத்த விரும்பினராய் அதன்விசேடத்தை அனைவர்க்குந்தெரிவித்தற்பொருட்டு எழுதியதொருநூலாகும் இது. இதிற்கூறியுள்ள விஷயங்கள் கற்போர்க்குமிக்க அதிசயத்தை விளைக்குந்தன்மையன. இந்நூலாசிரியரது ஆராய்ச்சி விடாமுயற்சி லோகோபகாரசிந்தைமுதலிய பெருந்தகைமைகள் இந்நூலால் நன்குவிளங்கும், இந்நூலில் கற்பனைவகையால் புனைந்துரைத்த சரித்திரத்தின் இடையிலே சைவவைஷ்ணவபுண்ணியக்ஷேத்திரங்கள் பலவற்றின் மகிமைகளைத் தொகுத்துக் கூறியமை பலரும்பாராட்டற்பாலது. அன்றியும், சென்னை யூநிவர்ஸிடி தமிழ்ப் பரீக்ஷகத்தலைவரும், மேற்படிசர்வகலாசாலை யங்கத்தினருள் ஒருவரும் தென்னிந்தியாவிற்பேர்பெற்ற இங்கிலீஷ்கவிஞரும் சுகுணசீலரும் கல்விகேள்வி யாதிவற்றிற் சிறந்தவருமாகிய ஸ்ரீமாந் தோட்டக்காடு இராமகிருஷ்ணப்பிள்ளை பீ. எ. அவர்களுடைய வள்ளன்மையை நமது முதலியாரவர்கள் இந்நூலில் ஏற்றவிடத்தில் எடுத்துக்கூறியிருப்பது தமிழ் பயில்வோராகிய என்போலியருக்கு மிக்க மகிழ்ச்சியைத்தருகின்றது.

உழலூர். கவி. வீரராகவமுதலியார் மரபினர் கவி ஸ்ரீநிவாசமுதலியார் அவர்கள் இயற்றிய அறுசீர்க்கழி நெடிலடியாசிரியவிருத்தம்.

பொன்போலுமழிவின்றிநாளெல்லாம்பொலிந்தோங்கும்புதுமைத்தாகும்
பொன்மரத்தினாடகத்தைப்புதுப்பித்தான்புலவருளம்புகழச்செய்தான்
பொன்னருளுடைகம்பயிலும் செங்கல்வபுரிநத்தம்புக்கிவாழும்
பொன்னம்பலப்பெயர்தன்னுரிமையினால் பெற்றபுகழ்பெற்றாரியாரே.

சாத்துகவிகள் முற்றுப்பெற்றது.

சென்னைபுரசை அஷ்டாவதானம் சபாபதிமுதலியாரவர்கள் இயற்றிய

## சிறப்புப்பாயிரம்.

அகவற்பா.

மாதரையுடுத்துவாழ்நிலமகள்பால்' பாதவமனைத்தும்பற்பலவுமிருளும்
ஓரறிவுயிரெனச்சிரியவவற்றுள், ஒன்றிதுகாறுநன்றுபுலப்படா [கையெனக்
தாங்காங்கிறைகொளுஉம்அன்னதன்பெயரோ, மரமல்லிகையெனமலைமல்லி
கெருடமல்லிகையெனக்கிளக்குமாண்பது, மூக்காளுற்கால்பற்பலவிருக்கை
வன்மைகூரிரதம்பன்மணைக்கேற்பன, கட்டுக்கோப்புப்பெட்டகம்பேழை
கொடுங்கையுத்திரம்விடங்கமுதலவும், உழவுக்கருவிகள்செழுமைச்சுதவம்
சாளரஞ்சுருங்கையோளிவாகனங்கள், அளவுக்கருவிகள்பளகற்றிடுமண்
டொடுகருவிசுரிகைக்கிடுகைப்பிடிகூர்ங், கொடுவாள்நெடுவாள்குடாரக்காம்பு
குடைக்கால்நெடுந்தூண்மடுக்கும்நீள்வண்டி, தொட்டில்பத்தர்கட்டிலின்னன
செய்தற்கமைந்ததுவைரமிருந்தது,சிதலையரித்தல்மூதிரவுளுத்தல் [வும்
தைலம்வற்றல்வெயிலாற்பீறல், மழையால்விம்மல்குழையாற்பொருமல்
சிறிதுமிலதாய்ப்பெரிதும்வளத்ததாய், வேண்டுவோர்தந்தம்காண்டருமில்லப்
புறக்கடைகொல்லைபுனத்துபவனத்த,மறுப்படாதெளிதின்வைத்துவளாத்துழி
எவ்வெவர்தமக்குஞ்செவ்விதிற்பயந்து,காசொன்றிலாமல்ஆசறக்கிடைப்பதென்
றனையதுபொன்மரமெனவொருபெயர்தந், தேனையமரங்களுள்வானளாம்அர
ஆதியசிலநாள்போதலுமதனதன்வன்மைகுறைந்துசென்முதலனவால் [சால்
உள்ளபாடனைத்துந்தெள்ளிதிஞேர்ந்து, பல்வகைத்தருவும்ஒல்லையிஞேரிடை
குழுமியதெனவும்பழுதெலாம்வெளியுறக், கொன்றைவில்வங்குருந்துகல்லால்
என்றிவைஅநுவாதித்ததெனவும், பின்னர்த்தம்முளிப்பொன்மரமொன்றே
நெடிதுபயப்பதுநிலைபேருற்ற, தகக்காழ்புறக்காழ்மிகக்கொண்டுள்ளது
அடிகிளைப்பதுபோல்படிதரத்தூரிலும்,முளைத்துத்தழைக்கும்வளத்ததெனவும்
தீர்மானித்துப்பேரியல்விருக்கம், அனைத்துங்கூடியருந்தலயாத்திரை
மனத்துவகையின்வழிக்கொடுபடர்ந்த', ஆண்டாண்டெடதிர்ந்துபாங்குறுதெய்வ
தம், யாவையுமேத்திச்சேவைபெற்றிப்பால்,தொண்டைநன்னாட்டிற்கண்டமூப்
பா, னிரண்டுதிருப்பதியிவற்றுளூழித் திரண்டபிரளயஞ்சிறிதுமணுகா
தெஞ்ஞான்றுந்தனியிஞ்ஞாலந்தொழூஉங், காட்சித்தாகியமாட்சியதென்னக்
கடைப்பிடித்தாங்குநன்னடைத்தவம்புரிந்து, கம்பமூன்றுங்கைகுவித்திறைஞ்
சும், நம்பனூர்கச்சியேகம்பநாதனைப், போற்றித்தரிசித்தேற்றவரங்கொண்
டன்னபொன்மரத்திற்கரசியிலளித்த,தென்னவுமோரணியியலுறப்புனைந்தே
நாடகமாகப்பாடினனென்ப,சிங்கவேள்குன்றுசார்செங்கற்பட்டு
நத்தந்தனில்வாழ்விற்பனஉபாத்தி,வேங்கடாசலமால்நோன்பின்பயனெனப்
பாங்கியலில்லறம்தாங்கிநடாத்தும்,கனிதருமின்சொன்முனியமைப்பெயரினுள்
எனவருமிவர்கடனிமாதவத்தால்,புத்திரனுய்வருஞ்சத்தியப்பொருளான்
வித்தியாசாகரன்நித்தன்வேணியார், வரதிமரபினிற்சிரமதாயுதித்தோன்
அரசர்மகிழோங்கருநன்னடையன்,தன்மக்குண்த்தோன்சின்மயற்கன்பன்
நன்னலப்பெருந்தகையின்னயக்குணத்தோன், பொன்னம்பலப்பேர்வன்னக்

கவியே.





சிவமயம்.

# பொன்மரத்து நாடகம்.

காப்பு - வெண்பா.

பொன்னுலகும் போற்றுதிருப் பொன்மரத்தி னாடகத்தை
இன்னுரையாற் செந்தமிழி லேயிசைப்பா—மன்னுநத்தக்
கல்வபுரிக் கைலையண்ணல் காதலிக்கும் வேழமுகச்
செல்வவி நாயகற்சிந் தித்து.

விருத்தம்.

உலகெலாம்புகழ்மரத்து ளொப்புயர்வில்லாதோங்கி
வலனுறுதலைமைசேர்பொன் மரத்தினாடகத்தைச்சொல்ல
அலகிலாமறைகள்பேசு மரும்பெருந்தேவர் தம்மை
இலகியபக்தியோடு மேத்துவேன் போற்றுவேனே.

இராகம்—சாவேரி-அடதாளம்.

பல்லவி.

துதிபுரிவாய்மனமே எந்நாளும்
துதிபுரிவாய்மனமே

அநுபல்லவி.

மதிநிலவியசெல்வ மாளிகைசூழ்செங்கல்வ
மாநகர்தனிற்சொன்ன மரத்துநாடகம்பன்ன (துதி)

சரணங்கள்.

விக்கினந்தவிர்த்தாளும் விக்கினராசனை
வீறும்வள்ளிக்குகந்த வேல்முருகேசனை
தக்கவர்புகழ்நத்தந் தங்குங்கைலாசனை
சாற்றுங்கோதண்டராம ஜானகிநேசனை (துதி)

வாக்கினிலெழுந்தருள் வாணியாகியமின்னை
மாயனுளமகிழு மலராசனப்பொன்னை
ஆக்குமண்டசராசரங்க ளளைவைக்குமன்னை
ஆகிவிளங்குமெங்கள் கமலாம்பிகைதன்னை (துதி)

தங்குநந்தீசரைத் தவத்துச்சண்டேசரை
சதுர்மறையுந்தமிழிற் சாற்றும்பிரகாசரை
துங்கமிகும்பொதிகைச் சூழனிவாசரை
தொண்டராறுபான்மூன்றும் பக்தவிலாசரை (துதி)

விருத்தம்.

மிகுதூய்மைபெறு மாப்தரளவையான
வேதங்கணனிவியந்து விரிவிற்பேசுந்
தொகுமுயிரின்முதலறிவா லிலங்குந்தெய்வத்
துவமுடையவிருக்ஷங்கள் சோர்ந்துதம்முள்
நகுகதிர்மாமுடியரசு நாடிப்பேச
நாதனருளாற்றலைமை பெற்றஅந்தத்
தகுபுகழ்சேர்பொன்மரத்தை விளக்குநன்னா
டகஞ்சொல்வேன்பலனுஞ் சாதகஞ்சொல்வேனே.

அவையடக்கம்.

கண்ணிகள்.

இராகம்-முகாரி-தாளம்-ஆதி.

பகீரதன்சுரநதிகொடுவந்தும் யாத்திரை செய்பவர்
கொடுவந்தோமென்பரதுபோல்
புகழ்தமிழ்கவிஞர்முன் புல்லறிஞனுகிலும்
பொன்மரவிர்த்தியைப் பேசுவனல்
பாச்சிசோச்சியெனும் பாலர்சொற்களைமேலோர்
பால்சோறெனக் கொள்ளல்கண்டேன்
கூசாமற்பேசினேன் கவிஞரங்ஙனமிதைக்
கொள்வாரென்றே ஆசைகொண்டேன்.

முகவுரை.

விருத்தம்.

இன்னிலவெலாமுன் னரண்யமாக
யிருந்துலகோரதனாலே யுதவிபெற்றார்
கன்னமுதற்கொள்ளைதனைக் கள்ளர்செய்யக்
கலங்கியதனாற் காட்டையழிக்கக்கண்டு

மன்னர்தடுத்திடக்கேமல் சவுக்குக்காட்டை
    வைத்தும்விறகாகப் பின்மரங்கள்கூடி
மன்னுகின்ற பொன்மரமேதம்மையாள
    வரம்பெற்றகதைசொல்லி யுரம்பெற்றேனே.

கண்ணிகள்.

இராகம்-முகாரி-தாளம்-ஆதி.

உலகெங்குமேமுன்னம்பலமான ஆரண்யம்
    ஓங்கியளாவின வாகாயம்
அலகிலாவந்தக் காட்டுமரங்களால்
    வீடெவருக்கமைக்கவுண்டாயின வித்தேயம்
கூட்டமாகவேகள்ளர் காட்டினில்வாழ்ந்திருந்து
    கொள்ளையிட்டார்களே முன்னுள்
எட்டிலெழுதொணுவக் காட்டைக்களைந்துமாந்தர்
    எண்ணுது மெண்ணுவரிந்நாள்
பாரிலோர்சூரியன்போ லரசாளுலகம்
    பரிக்குமரசரதைக்கண்டு
யாருங்காட்டைவெட்டாமற் சீராயவைவளர
    ஆதரித்தார்கள் செங்கோல்கொண்டு
பொன்மாரிபொழிந்திடப் பொன்விளைந்திடச்சென்னை
    புதுவையும்வாய்த்த தொண்டைநாட்டை
உன்னியகேமல்துரை சென்னையருகினிலே
    உண்டாக்கினர் சவுக்குக்காட்டை
இந்தச்சவுக்காட்டை அந்தரரும்பெரிதாய்ச்
    சந்ததமும் போற்றினர்
மந்த்ரம்பாரிஜாத மரிச்சந்தனங்கற்பகம்
    சந்தான மலர்தூற்றினர்
பாஞ்சாலதேசத்துப் பூஞ்சோலையோவிது
    பந்தர் மந்தாரச்சோலையோ
காஞ்சியிலுள்ள பூமாஞ்சோலையோசேய்ஞலூர்
    கனவாத்திமரச் சோலையோ
வன்மைதருமாயூரம் புன்னையஞ்சோலையோ
    மருதூர்மருதஞ் சோலையோ
மன்னவன்பிளேஸ்துரை தென்னஞ்சோலையோமூங்கில்
    வளரும்பாசூர்ச் சோலையோ

நல்லநடனமாடுந்தொல்லைத் தில்லைவனமோ
நண்ணுங்கடம்பவனமோ
வல்லிடும்பாவனமோ சொல்லுங்காண்டாவனமோ
மாயன் ப்ரந்தாவனமோ
காலகாலனாடு மாலங்காடோபாட்டால்
கதவுந்திறக்கு மறைக்காடோ
கோலமாமணங்காட்டும் வேற்காடோ
வெள்ளானைகொம்பைப் பெற்றவெண்காடோ
ஞாலமெலாம்புகழு நீலகிரியோவுமை
நண்ணும்யிமாசலமோ நன்று
சீலமிகுந்தமேலோர்சூழும் ஸ்ரீசைலமோ
செந்தமிழ்ப்பொதிகையோ வென்று
விண்ணோர்சவுக்குக்காட்டை யெண்ணிஎண்ணிப்புகழ்ந்து
வீணைமீட்டிப்பாடுவார்
மண்ணுலகோர்முயற்சிபண்ணி யச்சோலைவைத்து
மட்டில்லாபொன்னைத் தேடுவார்
ஆகிலுஞ்சவுக்குமரம் நாளுஞ்சூலைவிறகுக்
கடர்பந்தற் கால்களாகுந்தொல்லைச்
சாகரமானசம்சாரம் விடுதொழுவந்
தன்னுல்கட்டச் சகாயமில்லை
ஆரண்யமெங்கு மற்றகாரணத்தால்நேர்ந்த
அல்லலைவெல்லும் வகைதேர்ந்து
பூரணர்காருண்யத்தால் கல்லாலுடன்குருந்து
பொற்கொன்றை வில்வமிவைசேர்ந்து
காட்டிலும்நாட்டிலும் நின்றமரங்கட்கெல்லாங்
கைலைச்சாரலில் விரைவோடு
கூட்டமென்றறிவிப்பக் கோடானு கோடிமரங்
கூடிப்போசின மகாநாடு.

விருத்தம்.

மரங்களெலாங் கைலாயச்சாரல்தன்னில்
மகாநாடுகூடி யந்தச்சபை நடாத்தப்
பெருந்தகைகல்லால் மரமேமுதன்மையென்று
பெருந்துறைவாழ்குருந்து மரம்பரிந்துபேசச்

சரியென்றேசபைமுழுதுஞ்சம்மதிக்க
  நயவால் கல்லால மரஞ்சபையோர்க்கெல்லாம்
அரசமரத்தாள்க்கயினனேருந்தீதை
  அகனுவதற்குரிய வகைபுகுலுந்தானே.

கண்ணிகள்.

இராகம்-ஆகிரி-தாளம்-ஆதி.

வேதன்செய்பூதலத்துக்காதாரமானநம்மை
  வேதையெவர்தான் செய்யலாமோ
ஆதியில்வானளாவிவீறும் நம்மையரசு
  அடியோடழிக்கப் பார்க்கலாமோ
உலவுந்தபோதனர்க ணிலையாகத்தவஞ்செய்ய
  உத்யானவனமாக விருந்தோம்
நலமாம்வேதாகமங்கள் பலபுராணங்களோத
  நைமிசார்ண்யமாக விருந்தோம்
தந்தைதாயைப்பிரிந்துவந்த ஸ்ரீராமருக்குச்
  சொந்தவைகுந்தம்போல விருந்தோம்
ஐந்துபாண்டவரரிச்சந்திரனளனுதியோர்
  வந்தகாலஞ்சொர்க்கம்போ லிருந்தோம்
இவ்வாருய்வாழ்ந்தநம்மை யெவ்வாறுபக்ஷிகளை
  ஏனைகருடராஜன் போல
செவ்வையாயாளாம லிவ்விருக்ஷம்கைவிடத்
  தீங்கையடைந்தோஞ்சால
காலத்திற்கேற்றதொரு கோலம்போனகத்தாளி
  காப்பாற்றத் தப்பிநின்றோம்
ஞாலத்தில்வாளேந்தி நரரண்டினகாலத்தில்
  நடுநடுங்கிப் போகின்றோம்
ஆனலரசும்வேம்பும் வானோர்க்குமுக்கியமா
  யமையுமென்றாலும் வெகுலேசம்
யானையைக்கொல்பாம்பையுந்தானே துண்டிக்கும்மயில்
  அதுபச்சோந்தியைக் கண்டால்மோசம்
அத்தன்மைபோலரசு புத்ரப்ராக்யந்தந்தாலும்
  அல்லல்தடுக்குங்குண மின்று
நித்தமுதவிசெய்யத் தக்கதொருதருவை
  நியமித்தரசாய்க் கொள்ளனன்று

ஆனபூர்வதவத்தாற்றுனே வையகந்தன்னை
அளவேண்டுமல்லாது
ஏனேபார்வையில்லாமற் போனகோட்டான்கதைபோல்
எளிதிலாள்கை செல்லாது
தேக்குநூக்குவேங்கை செம்மரம்சந்தனஞ்
சிர்ரயாளாதோ வென்னில்
பாக்குமரம்போலாகும் சீக்ரமாயவையெங்கும்
பரவாதித்தேசந் தன்னில்.

## விருத்தம்.

அரசமரத்தாளுகையிலடையுந்தீமை
யடுத்துரைத்த கல்லால்சூழ்ந்தாலோசித்துச்
சரசமுடனம்மையெல்லாமீன்றதாய்போல்
தயவாகச்சதாகாலமதாரித்தே
அரசியற்றபொன்மரமே தக்கதென்று
மவனிக்குமிகப்பலனை யளிக்குமென்றுந்
தெரியவதுயின்னதென்றுஞ் சபையோர்தங்கள்
சிந்தைமகிழுறவிரித்துச் செப்புமன்றே.

## தரு-இராகம்-மத்யமாவதி-அடதாளம்.

### பல்லவி.

மரத்திற்சிறந்தது பொன்மரமே அன்றி
மற்றொன்றுமில்லையிதுஸ்திரமே

### அநுபல்லவி.

உரத்தமரமல்லிகை கிரிமல்லிகைவச்சகம்
உன்னுஞ்சக்ரம்குடசமென்னமன்னுலகத்தில் (மரத்)

### சரணங்கள்.

தேசாதேசங்களெல்லாம் ஓடி வீணாய்த்
தேக்காதிமரங்களை நாடி நாளும்
ஆசையாய்ப்பெரியோர்கள் தேடி வைத்த
அரும்பொன்னைத்தந்து மிகவாடிச் சற்றும்
மோசம்போக வொட்டாமல்
காசும்நஷ்டங் கிட்டாமல்
வாசஸ்தலத்தில் யாவும்
லேசில் தருந்தட்டாமல் (மரத்)

வண்டுதுளைத்தல்செல் சாக்காடு
   வீறல்மரங்கள்வாழ்ந்திடும் பெருங்காடு அதைக்
கண்டும்படவேண்டுமே பாடுமகா
   கஷ்டத்தால் வரவேண்டும்வீடு வீணாய்
வண்டிசத்தங் கொட்டாமல்
   தெண்டகுடியாகாமல்
வாழுமாளிகைமாட்டுத்
   தோழமாகுமல்லாமல் (மரத்)
ஆறுதலைமுறையானாலும் வயிரம் அணுகாக்
   காட்டுமரங்களானாலும் பெருஞ்சோறு
நிறைந்தபனையாலும் பொருள்
   சோர்ந்திடாமற் செய்வதனாலும் வீசும்
சூறைக்காற்றை யொறுத்து
   ஊறல்நிலம் வெறுத்துத்
தோற்றுங்கிளைவித்தாலும்
   போற்றவாளு மென்மேலும் (மரத்)

விருத்தம்.

தசரதராமர்நாளில் தரித்தபொன்மரமேயாளல்
உசிதமென்றுரைப்பக்கல்லா லுயர்மகாசபையோர்கேட்டுச்
சசிபானுவானேரொப்பத் தக்கதோவெனவினவத்
தசவிதமகிமைகாட்டிச் சாற்றலுற்றதுகல்லாலே.

தரு-இராகம்-சஹானா-தாளம்-ஆதி

பல்லவி.

மகிமைபின்னமுஞ் சொல்லுவோம் பொன்மரத்தானல்
வாழ்க்கைபெற்றிடர் வெல்லுவோம்

அநுபல்லவி.

ஜெகமுழுதுஞ்செழிக்குந் தேக்குநாக்கைப்பழிக்குஞ்
சீராயுதவியாவுந் தாராளமாய்க்கொழிக்கும் (மகி)

சரணங்கள்.

சின்னஞ்சிறுவயதில்முன்னம் வில்லைவளைத்த
   சீதாராமனைப்போலுங் கரிகால்சோழனைப்போலும்
பின்னுமுக்ரபாண்டியன் விக்ரமார்க்கனைப்போலும்
   பெற்றதுண்டுவலிவுபீமன் க்ரீட்டியைப்போலும் (மகி)

மட்டிலாதவைதேக்கு நூக்கு வேங்கைவேம்பு
வளர்கருங்காலியும் மந்திரிகளாவதாலும். (இஷ்)

அதிர்மணிரதகஜ துரகபதாதிபடை
அனந்தகோடானுகோடி அமைக்கஎண்ணினதாலும்
மதமிகுந்தசவுக்கு கொற்காபுளிவிருக்ஷமும்
மற்றுள்ளவேல்சவுண்டல் மரங்களென்பதனுலும் (இஷ்)

விருத்தம்.

பூதலத்தில் வேதனையிலாமல் நம்மைப்
பொன்மரமே அரசாளச் சிறந்ததென்று
காதலுடன் கற்றறிந்த கல்லால்சொல்லக்
கருதுபூ மரமென்று கொன்றைகூற
நாதன்மகிழ் புஷ்பமரம் அல்லவென்றும்
நல்லபுஷ்ப விதிவிளம்ப வில்லையென்றும்
ஆதலால் பொன்மரமே தக்கதென்றும்
அரியகல்லால் மரம்பின்னும் உரைக்குந்தானே.

தரு-இராகம்-சஹானு-தாளம்ஆதி

பல்லவி.

பூஜைக்குரியபுஷ்பமரங்கள் அனந்தம்-அதில்-பொன்மரஞ்சேராதே

அநுபல்லவி.

ஆசையெவருங்கொள்ள வீசும்வாசனை தன்னை
அமைதலாகியகொன்றை ஆத்திவில்வம்நற்புன்னை (பூஜை)

சரணங்கள்.

வன்னிதேவதாரங் கோங்குசண்பகங்குரா
மகிழலரிகிளுவை அகில்குளஞ்சிகுருந்து
உன்னும்ஞாழல்நுணா நாவல்பலாவிளா
ஒப்பிலாயெலுமிச்சை வெட்சிநெல்லிசெருந்தி (பூஜை)

பாதிரிநாரத்தை பாரிஜாதம்யிலந்தை
பன்னீர்பொன்னூமத்தை பொன்னவாரைமுருக்கு
மாதுளைமாநொச்சி மாயிலிங்கைமருது
மந்தாரைஅசோகு சந்தனம்வெள்ளெருக்கு (பூஜை)

கோட்டுப்பூமரம்யாவும் வெட்டாதிருப்பதேது
குறைத்தாலவைகளெல்லாந் தளிர்ப்பதுகிடையாது
நாட்டிற்பொன்மரநாளுந் தறித்தற்குச்சலியாது
நாளொன்றுக்குலக்ஷமாய் நீளச்சூழுமல்லாது (பூஜை)

விருத்தம்.

போற்றும்பொன்மரத்தைக்கல்லால் பூமரமல்லவென்று
சாற்றியேவிதியைக்காட்டித் தாபிக்கச்சபையோர்கேட்டுத்
தேற்றமாய்விடுகட்டச் சிற்பநூல்கருத்தேதென்ன
ஏற்றதென்றதற்குமேது எடுத்துரைத்திடுங்கல்லாலே.

தரு-இராகம்-இந்துஸ்தானி-தாளம்-ஆதி

பல்லவி.

அழகுமாளிகைகட்டப்பொன்மரம் ஆகுமென்றார்தானெண்ணரோ

அநுபல்லவி.

செழுமையானகாடுகள் ஜெகத்திலழிந்ததாலுஞ்
சிற்பநூல்வழிநிற்க விப்போகூடாமையாலும் (அழகு)

சரணங்கள்.

மாமரந்தேவர்க்கும் வேம்புமறையவர்க்கும்
மன்னர்களுக்குத்தேக்கு மரமாகுமென்றிருந்துங்
காமருவுமிலுப்பை வைசியருக்கும்வேங்கை
காராளர்க்கெனும்விதி கடந்துநடக்கநேர்ந்தும் (அழகு)

விலக்கினமரங்களோ விலக்காகப்பதினென்றும்
விரித்துரைத்திடில்அத்தி ஆலரசெனலாலும்
இலவுடனேயிச்சி குச்சம்-மகிழ்விளாவும்
இலந்தைபுரசுபீலி யிவைதானென்பதனாலும் (அழகு)

ஆயினும்விலக்கின அத்தி ஆலைவெறுத்து
யாருந்தள்ளாமலே சிராய்-கைக்கொள்வதாலும்
ஏயும்பொன்மரத்துக்கு மேயவிலக்கிலாமல்
இம்மூன்றியமையா திக்காலமென்பதாலும் (அழகு)

விருத்தம்.

தொல்லைதனைநீக்கும்வகை கல்லால்சொல்லச்
சொர்க்கம்போல் பொன்மரநாடர்ளப்பூர்வம்

நல்லதவஞ்செய்தோ மில்லையென்று
நயமாகக்கொன்றைமர நவிலக்கேட்ட
வில்வமரம் யோசித்துச் சிவத்தைப்பேணல்
மிக்கதவத்திற்கழகா மென்றேநல்லவை
சொல்லியவா றினித்தவத்தைச் செய்வோமென்னத்
தூயகொன்றை யதைமறுத்துச் சொலுமிப்பாலே.

கண்ணிகள்.

நற்றவம்புரிதற்குமுற்றும் ஞானமுள்ளோர்கட் குற்றதேயல்லாது
எப்போதுந்தவம் நாம் செய்தற்குச்செல்லாது
பேரறிவுளநம்மை ஓரறிவுயிராகப் பிறப்பித்தானே சொல்லாது
புல்லைப்போல்நமது பிறப்பேமிகபொல்லாது
மகம்மேருமலையும் நிகராகாதெனத்தேகம் வந்ததனுல்பூமி
பாரமேயன்றி வகைதந்தானே சாமி
ஏதோயிப்பிசங்குக்கு நாவைக்கொடுக்க அவை
ஈறறிவுயிராயின சிறியசெல் லெறும்புமூவறிவாயின
நண்ணும்வண்டுதும்பிகள் துன்னுங்கண்ணையும்பெற்று
நாலறிவாய்ஞாலம் எங்கெங்கும்சென்று நாடும்உற்சவகோலம்
அரியதேவர்களொடு நரரும்மிருகம்பக்ஷி ஐந்தறிவாய்மேவும்
நற்றவஞ்செய்ய ஆவலுடனேதாவும்
இப்படியிருப்பவையுள் நம்மைஓரறிவுடன்
ஏன்சிருஷ்டித்தான்பிரமன் எப்படிதவமியற்றச்செய்வான்பரமன்
கண்ணுதல்தமைக்காணக் கண்களுண்டோநமக்குக்
கைகால்களோ அபாவம் ஆதலால்தவங்கருதாமையேசுபாவம்

கொச்சகம்.

இந்தவகைநாம்தவத்தை யியற்றுவதற்கோர்வழியும்
எந்தவிதத்திலுங்காணேம் என்றுகொன்றைதடுத்திடலுஞ்
சந்ததமுமேலான தவஞ்செய்யநாமெல்லாம்
வந்ததெனவேவில்வ மரங்கூறுகின்றதுவே.

இராகம்--சாவேரி--தாளம்--ஆதி

பல்லவி.

அரிதாகிய தவம் புரிதற்கு நமக்கேயல்லாது மற்றவர்க்குச்செல்லாது

அநுபல்லவி.

பெரிதாகிவிளையும் ஆசாபாசம்பொல்லாது
பின்னுங்கோபதாபந்தன்னால் தவநில்லாது (அரி)

சரணங்கள். [து

பெரியஉலகில்தவம் எளியவிஷயமென்பதேது சொன்னாலும் ஒவ்வா
மருவுமுக்குணங்களில்பெரிதாம் சத்வகுணம்வாராது தவந்தான் சேரா
சரியாகவோமக்கு சாத்வீகம்வாய்த்ததால் [காது
தவந்தான்விட்டுநீங்காது பவந்தான்சற்றுமீங்காது (அரி)

மானிடஜனனமேஅரிதவரினுந்தேவரரிது அவரினும்நாம்அரிது
வானோர்களைரக்ஷித்த வள்ளிநாயகன்சாக்ஷிபெரிது வேங்கமரமானத
ஆனபார்வதிகாஞ்சி மாநகரில்தவத்தை [ரிது
ஆற்றமாமரநீழல் அருளுங்கம்பரும்சாக்ஷி (அரி)

முன்னேன்விர்த்தாசலம் வன்னிமரத்தருகில்வாசம்செய்வர் உயிர்க்
[குபதேசம்
இன்னமயிலேயிசர்புன்னைமரநிழலில்நேசம்வானோர்சூழதற்குல்லாசம்
உன்னற்கரும்ரகசியம் தன்னைக்கல்லால்நிழல்
இபதேசம்பெற்ற ஜனகாதி நால்வரும்சாக்ஷி (அரி)

வள்ளல்கொற்றங்குடியார் முள்ளிச்செடிக்குத்தந்தார் மோக்ஷம் நாம
[அளிக்கும்ருத்திராக்ஷம்
கொள்ளையாய்த்தரிப்போர்க்குக்கொடுத்திடும் அகண்டசாம்பராஜ்யம்
[அன்றிசிவலோகராஜ்யம்
உள்ளபடியேபெருந்துறையில் குருந்தடியில்
உபதேசம்பெற்ற வாதவூரரும் ஓர்சாக்ஷி (அரி)

சம்புஆனைக்காவினில்சம்புநாவலால் அரசாக்ஷிபெற்ற சிலந்தியுஞ்சா
க்ஷி, தம்பதியாய்வந்துதவஞ்செய் வன்னிமந்தாரை லக்ஷம்சாக்ஷியா
[கும் நம் பக்ஷம்
உம்பருறையுங்கழுக்குன்றை ஓரால விருட்சம்
ஒப்பற்றவலஞ்செய்தல் இப்போதும பிரத்தியட்சம் [அரி)

விருத்தம்.

உம்பரில்நமதுஜென்மம் உயர்வென்றுசாட்சியாபே
கம்பர்மாமரமேயாதி காட்டியேவில்வஞ்சொல்லச்
சம்புபூஜைக்கியைந்த சந்தன்மரஞ்சிறந்தித்து
வம்பவிழ்மலர்மரங்கள் வண்மையைச்சொலும்நன்றாய்.

இராகம்-தற்பார்-தாளம்-அட

பல்லவி.

ஆதிசேஷனுஞ்சொல்ல அடங்காநமதுபுகழ் ஆனாலுஞ்சிறிது சொல்
[வேன்

அனுபல்லவி.

ஆதாரம்நாமில்லாமல் ஓதும்உலகம் ஏது
அய்யன்பஞ்சகிர்த்தியங்கள் செய்யமார்க்கந்தானேது (ஆதி)

சரணங்கள்.

தெய்வகற்பகவிருட்சம் தேவர்கள்கேட்பதைத்
தெரிந்துதராவிடில் தேவருலகமேது
உய்யுமிவ்வுலகத்தை உண்டமாபோன்றன்னை
ஓராலிலைதாங்காவிடில் உறங்குவதேது (ஆதி)

பாண்டவர்கட்குவன்னி வேண்டும்ஆயுதங்களைப்
பரிந்துநல்காவிடில் பாரதந்தானேது
நீண்டவாலிராமரால் மாண்டபோதுமரமேழ்
நேரில்நிற்காவிடில் ராமாயணந்தானேது (ஆதி)

பொன்னிலங்கையசோகு தன்னிழல்தனைத்தந்து
போற்றாவிடில்சீதை வீற்றிருப்பதும் ஏது
உன்னும்யிலுப்பை அந்நாள் அன்னைபோலும்பூந்தேனை
ஊட்டாவிடில்திரு வள்ளுவர் நூலேது (ஆதி)

காளமுனிபூதத்தால் மாளநேர்ந்திடவன்னி
காப்பாற்றாவிடில்பஞ்ச பாண்டவர்வாழ்வேது
நீளக்கனியைக்கொய்த கோளைமுனிபொறுக்க
நெல்லிமரம்செய்திடில் நிலம்ஐவராள்வதேது (ஆதி)

பார்புகழ்சம்பந்தர் பாடல்பெற்றே ஓத்தூர்
பனைமரங்களுஞ்சிவ பதவிபெற்றதுந்தீதோ
சீராருஞ்சிவசின்ன மூர்த்திநாயனாரை
ஜெகமுழுமையும்ஆளச்செய்தேனென்பதுஞ்சூதோ (ஆதி)

விருத்தம்.

சந்தனமிப்பிரபாவஞ் சாற்றவுங்கேட்டுநல்லோர்
மந்திரார்ச்சனைக்குவேண்டும் மந்தாரைமரம்ஆலோசித்தங்
கெந்தனாலத்தும்நம்மை யில்லாமல்நடத்துங்கிர்த்தியம்
அந்தரமலர்போலாமென் றறையுங்காரணமதற்கே.

இராகம்-அடாணா-தாளம்-ஆதி

பல்லவி.

எவ்வுதவியும்நம்மாலிருப்பதல்லால்வேறுஎதிர்பார்க்கவிடர்தாஹண்
[டோ

அநுபல்லவி.

செவ்வையாயுழுதுண்ணச் சிறகோலும்நீட்டுவோம்
ஜெகமுழுதையும்நாம் செங்கோலாலாட்டுவோம் (எவ்)

சரணங்கள்

நாடுதேசங்கள்யாவும் மாடமாளிகைகட்ட
நாமேசகலமான சாமானுவோமல்லாமல்
வீடருள்பரமனும் விண்ணோர்மண்ணோர்களும்
மேவுங்காய்கனிமலர் ஈவோம்தடையில்லாமல் (எவ்)
சத்தியந்தவறின சதுர்முகன்பட்சத்தில் தாழம்பூ
தன்வாயால்சாட்சி சொன்னதும்மின்றோ
பத்தர்சிறுத்தொண்டரை அத்தர்சோதிக்கஆத்தி
பரிந்திருந்ததுலகில் தெரிந்தமகிமையன்றோ (எவ்)
அரன்மருதூரில்வரக் குணபாண்டியன்பிர்ம்ம
ஹத்தியைமருதமரம் அகற்றினதுந்த்ரணமோ
சுரராலிந்திரன்பழி ஏற்றவர்க்குள்ளாமது
சுற்றமாகியபல விருக்ஷங்களோர்பணமோ (எவ்)
மருகலில்மணங்கண்டு விளைவாய்மதுரைசென்று
வன்னிமரமும்சாட்சி வழங்கினதறியாரோ
திருவொற்றியூரில்தொண்டர் சங்கிலியார்க்குயர்குள்
செய்யச்சாட்சிமகிழ் சிறப்பினைக்குறியாரோ (எவ்)
செம்மையாய்த்தவஞ்செய்த நம்மாழ்வாருக்கிருக்கை
சிந்தவிருக்ஷம்யின்றருள்போல் சீராட்டினதுப்பேரோ
நம்மையாளும்அனந்தன் தன்னைகவுண்டன்னியர்
நாடக்காட்டினசூத விருட்சமகிமைகள்சோ (எவ்)

விருத்தம்.

ஆரணசாஸ்திரங்கள் அறிந்தமர்தானாதானே
தாரணவருக்ஷர்தன்னில் ஜகமெலாம்பிரளயமாகி
பூரணவெள்ளமீறும் போதுமேற்பரனுய்க்காத்த
காரணம்போலெப்போதுங் காப்பதையுணர்க்குங்காணே.

இராகம்-சாவேரி-தாளம்-அட

பல்லவி.

நம்மாலல்லாலெவர் தம்மாலுங்கிடைக்காது நானுமைப்பதுஉண்மை [யே

அநுபல்லவி.

செம்மையாய்க்கடல்நதி தம்மைக்கடந்துபொருள்
தேடஓடமுநாமே தெப்பல்கப்பலுநாமே (நம்)

சரணங்கள்.

தேவாலயங்கள்பூஜை செய்யக்காரண நாமே
திருவிழாரதமாதி வரும்வாகனங்கள் நாமே
ஆவலுடனேதவம் ஆற்றயிடமு நாமே
அவிர்ப்பாகம்யாகஞ்செய் தளிக்கஹேதுவு நாமே (நம்)

சாலைசோலைகள்நிழல் சத்திரமாவது நாமே
சகலநோய்களுந்தீர்க்கும் சஞ்சீவிகளு நாமே
ஆலைசெக்குகள்தறி ஆற்றக்காரண நாமே
அரியசாஸ்திரங்கலைகள் அஸ்திரமாவது நாமே (நம்)

மதயானைமுதலாக வசிக்கக்காடுகள் நாமே
வாழும்பட்சிகள்யாவும் சூழஆதார நாமே
உதவும்பெட்டிபேழைகள் உலக்கையாதிகள் நாமே
உலகந்தன்னில்சகல உதவிசெய்வது நாமே (நம்)

விருத்தம்.

அன்னவாறுலகுக்கெல்லாம் ஆவனநாமேயல்லால்
பின்னையோர்பொருளன்றென்று பேசுமந்தாரைதானே
யென்னவுமதிசயிக்க எளிதானபட்சிஜாலம்
அன்னியமிருகம்எறும்பின் அருந்தவம்விளம்புமம்மா.

கண்ணிகள்.

இராகம்-எதுகுலகாம்போதி-தாளம்-ஆதி

௧. ஆனைக்காவல் காளத்தி மாமலைதேடிப்புண்யம்
யானைசிலந்திசெய்த தாங்கு
வானரம்அணில்காகங் குரங்கணிமுட்டந்தனில்
வருந்திபூஜைசெய்ததும் பாங்கு

௨. மயிலைதனில்மயூரம் மாதேவனைப்பணிந்து
வருந்திபூஜித்ததென்பர் முன்னம்

பயிலும்விடையோன் ஆவூர் ஆவடுதுறையினில்
பசுக்கள்போற்றின துண்டு யின்னம்

௩. மாடேறுஞ்சடையோனை ஆடானைத்தலந்தன்னில்
ஆடுபூஜைசெய்தது சீராய்
வீடருள்கழுக்குன்றில் வேளூர்தனில்கழுக்கள்
விமலனைநேசிப்பதும் நேராய்

௪. கௌரிமாயூரத்தில் கனிந்துபூஜைசெய்தன
கரம்குதிரைகள்நரி பூனை
சௌரிசிறுகுடியில் ஆமைமணஞ்சேரியில்
தண்கருவைநல்லூரில் யானை

௫. வாலுள்ளவலியான் வலிவலந்தன்னிலும்
மயேந்திரப்பள்ளி எலியும்
சேலந்தன்னிற்கிளியும் கோழம்பம்குயிலும்
திருப்புலியூரில் புலியும்

௬. கண்ணிலாஎறும்புகள் எறும்பீச்சரத்திலும்சீ
காழியில்புறுபோற்ற விலையோ
எண்ணும்பாதிரிப்புலியூரில் முயல்பூஜித்தும்
எவர்தான்பழிப்பர் பத்துதலையோ

விருத்தம்.

அருந்தவஞ்சிற்றெறும்பாதி புரியக்கேட்டும்
யாதுதடையென்றுகல்லால்கேழ்க்கக்கோயில்
தெரிந்தகோபுரமதிலில் முளைக்குங்குற்றம்
சிவபெருமான்பொருரென்றுகொன்றைபேசப்
பொருந்தரசின்குற்றமென்று கல்லால்சொல்லப்
புராரிஈமக்கிரங்கியநுகிரகித்துநன்மை
தருந்தயவைஎளிதுசெயும் எனநினைக்கத்
தக்கதலவெனகோங்கு சாற்றுமாறே.

கண்ணிகள்.

இராகம்-எதுகுலகாம்போதி-தாளம்-ஆதி

௧. எருதின்மீதேறும் எந்தையிரக்கம்உள்ளவரென
எண்ணவிடந்தாருளதோ

௩

புரமூன்றெரித்தவரார் மதனை எரித்தவரார்
பூரணர்சித்தம் எளிதோ

௨. தக்ஷன்றனக்கோராட்டுத்தலைவைத்துத் தேவர்களை
ஜாடச்செய்ததைப்பன்னவோ
அக்ஷமெனவெந்தழல் நெற்றியில்தாங்கிமத
யானைத்தோல்போர்த்த தென்னவோ

௩. அந்தகாசூரன்றன்னை அழித்துப்பாண்டாசூரனை
யாகத்தில்நீறாய்ச்செய்தாரே
முந்திச்சலந்தரனும் வந்துதம்மைஎதிர்க்க
முனிந்துதலை கொய்தாரே

௪. குன்றாநக்கீரனை நெற்றிக்கண்பொரியினால்
குளத்தில்தள்ளியதோதம்கோபம்
அன்றுபுலியையுரித்துடுத்தினவர் புத்தனை
அடக்கிவிட்டதும்ஓர்ப்ரதாபம்

௫, எண்ணாயிரஞ்சமண முனிவரைக்கழுவினில்
ஏற்றினாரேமழுவேந்தி
பண்ணாதபிள்ளைக்கறி பண்ணச்சொல்லினாரவர்
பான்மைதானோ வேதாந்தி

௬. யாவரும்கண்டாலோடும் பாம்புகளைத்தரித்த
ஆச்சரியம் அறிவோமே
மேவருமுயலகன் றன்னைப்புரட்டிக்காலில்
மெரித்துக்கொண்டார்தாமே

௭. வேதாகமங்களென்ன ஓதினாலும்ஓதட்டும்
மேதினில்சொல்வதேச்சோ
ஆதாரமாமும்மூர்த்தி யானவருட்சங்காரம்
ஆம்தொழிலும்போச்சோ

௮. எமனையுதைத்ததார் மாமனைவதைத்ததா
ரீசனென்றறியோமோ
பூமன்சிரங்கொய்தோரை நாம்வழுத்துவதனால்
பொன்மரம்ராஜனாமோ

விருத்தம்.

சந்த்ரசேகரனிவ்வாறு தயையிலாரென்றுகோங்கு
சிந்தித்துச்சொல்லக்கல்லால் சிவசிவாயென்றுபோற்றி

எந்தைகைலாயர்தன்னை எடுத்தவன்முதலியோரை
அந்தோமுன்பொறுத்துக்காத்த அவர்க்குநிகருவாருண்டோ.

இராகம்-நாதநாமக்கிரியை-தாளம்-ரூபகம்

கண்ணிகள்.

க. ஞாலமெலாம்வெருண்ட ஆலாலம்உண்டுசுரர்
நரரைவாழ்வித்ததறி வீரோ
சீலஅடியருக்காக்கூலி யாளாகிவந்தோர்
திருவிளையாடலுஞ்செய் தாரோ
உ. குதிரையென்றேநரியை மதுரைப்பாண்டியனுக்குக்
கொடுத்த தயாளநிதி யாரோ
விதியிலாதவர்போல நதியுமதியுமஞ்ச
விறகைச்சுமந்தாரது சீரோ
ங. பார்த்தன்கைவில்லினுலே போர்த்தொழிலிலடித்தும்
பாசுபதந்தந்ததோர் காசோ
சாற்றும்பகீரதனுல் பேர்ற்றக்கங்கையைச்சென்னித்
தாங்கியாண்டதும்வெகு லேசோ
ச. வல்லாளராஜனுக்கு நல்லகர்மங்கள்செய்ய
வந்தாரென்பது த்ரணமோ
கல்லானைசெங்கரும்பை மெல்லச்செய்தும்எழு
கடலழைத்திட்டதும்ஓர் பணமோ
ரு. குண்டோதரனுக்கன்னக் குண்டமும்வையையாறுங்
குறைவிலாதளித்த விசேஷம்
கண்டீர்சுந்தரமூர்த்தி ஒண்டொடிப்பரவையைக்
கலக்கவுண்டாக்கினர்சந் தோஷம்
சா. வட்டமாமுலையறு வருக்குப்பட்டமங்கையில்
அஷ்டசித்தீந்தசிவ யோகர்
பட்டினத்துப்பிள்ளைக்கு மட்டற்றஆசையெல்லாம்
பற்றறச்சொல்லிய தியாகர்
எ. நிலையாய்மார்க்கண்டரொமன் வலையிலகப்படாமல்
நிறுத்தினஜீவகாருண்யர்
எலியொன்றுமாவெலியா யுலகத்தையாளவரம்
ஈந்துரக்ஷித்தமஹாசண்யர்

அ. ஒன்ருய்நிலம்வளரப் பன்றிக்குட்டிக்குப்பாலே
ஊட்டிமந்திரிக ளாக்கினர்
கன்றிப்பெற்றதந்தையைக் கொன்றபாலர்க்குப்பழி
களையணுகாமற் போக்கினர்

௯. தாயிலாரோர்பெண்ணுக்குத் தாயாய்மருத்துவமுந்
தான்செய்தளித்தஉல் லாசர்
தூயசேஷனுந் தனதாயிரம்வாயினுலுஞ்
சொல்லரியதயாளு வீசர்

௰. தன்னிகரில்லாஒரு முன்னவனைப்பூஜிக்கத்
தாக்ஷிஉள்ளதோ சொல்லீர்
மன்னுலகாளச்செய்வார் பொன்னுலகாளச்செய்வார்
மகத்வமறிய வல்லீர்

விருத்தம்.

எல்லாம்வல்லவர் க்ருபையைக்கல்லால்பேச
இவைசபையோர்கேட்டு மனமுருகிப்போற்ற
அல்லல்சற்றுமில்லாம லிப்போதிங்கே
யருந்தவஞ்செய்வோமென்று வில்வங்கூற
நல்லதவமேற்கொண்டு கைலைச்சாரல்
நண்ணினரெவருமில்லையென்றுகல்லால்
சொல்லிமாதேவிசுரர் முனிவர்யாருஞ்
சூழ்புவியில்செய்ததவஞ் சொலுஞ்சிந்தித்தே.

இராகம்-தற்பார்-ஆதிதாளம்.

கண்ணிகள்.

க. நம்மையெல்லாமீன்ற அம்மைகைலைவிட்டு
ஞாலத்திற்போய்த்தவத்தில் நிலைத்தார்
தம்மொடுநந்தி சந்த்ரன்பிரம்மாவிந்திரன்
தேவர்தவங்கள்செய்தல்லல் தொலைத்தார்

உ. ஜனகர்சச்சிதானந்தர் அகஸ்தியர்புலஸ்தியர்
ஜமதக்னி ததீசி முனியோ
சனற்குமாரர்சுகர் கௌதமர்காசிபர்
சத்தகனத்ரி முனியோ

௩. வியாக்ரபாதர்நா ரதர்பதஞ்சலிவான்
மீகர்மார்க்கண்ட முனியோ

வியாசர்பராசர் தூர்வாசர்பினுகிசொல்
விஸ்வாமித்ர முனியோ

ச. பாரத்வாசராங்கீரசர் ப்ருகுமுனி
பத்பர்வசிஷ்ட முனியோ
எரண்டர்கலைக்கோட்டுமர்முனி ரோமசர்
இரண்யவன்மா முனியோ

ரு. செப்பினமுனிவரும் அப்பாலுள்ளோருமண்ணில்
செய்ததவத்தாலில்லை ஸ்ரமமே
அப்படியேதவத்துக் கிப்போதேநடந்துநா
மனைவரும்ஆற்றுதல் க்ரமமே

விருத்தம்.

படவிமேல்தவத்துக்கேகல் புண்ணியமென்னக்கல்லால்
கொடிதாகிலேபோர்ந்தோயக் கூசாமலின்னஞ்செய்யுங்
கடுகியப்ரவாகஞ்சூறைக் காற்றிவைக்குட்படாமல்
படியுநற்றவத்துக்கேற்றப் பதிக்ளேக்கொன்றைபன்னும்.

இராகம்-காம்போதி-ஆதிதாளம்

கண்ணிகள்.

க. பெருமைசேர்மாணிக்க வாசகர்சிவதீக்ஷை
பெற்றபெருந்துறையோ கௌரி
பிரமன்க்ரஹங்கள் முன்பூஜித்துவரம்பெற்ற
பேணுபெருந்துறையோ

உ. மலைமகள்மறையோன் மார்ஜாலமும்அர்ச்சித்த
மயிலாடுகின்றதுறையோ-பல
மாமுனிவர்வித்யாதரருந் தோத்திரஞ்செய்த
மகிமைசேர்வெண்டுறையோ

ந. அப்பர்சம்பந்தர்முன் கதவந்தனைத்திறந்
தடைத்தமறைக்காடோ-கோப
அனலால்வந்தவீர பத்ரர்அர்ச்சனைசெய்த
அந்தக்கொள்ளிக்காடோ

ச. வாகீசனாயீசன் வாவென்றழைத்துச்சென்று
வழிகாட்டினவாய்மூரோ-எங்கள்

மாதுநாயகிபாகன் இடும்பனுக்கருள்செய்து
மகிழுங்கன்றாப் பூரோ

ரு. பக்தியிலாமல்யாகஞ்செய்த தக்கன்றலையைப்
பறித்தபறியலூரோ-திக்குப்
பாலகர்வேதங்கள் பண்ணவர்களும்வாழ்த்திப்
பரவினவழுந்தூரோ

சு. அஷ்டவசுக்கள் முதலானோர்களன்புடன்
அர்ச்சித்தநனிபள்ளியோ-அந்த
அகஸ்தியரிஷியாதி அருந்தவர்சுரர்தொழும்
அகத்தியான்பள்ளியோ

எ. குடத்தினின்றுந்திரண பிந்துமுனிவர்குஷ்ட
குறைதீர்த்த குடவாயிலோ-முசு
குந்தச்சக்ரவர்த்தி முதலானோர்பூஜித்த
கோலநற்காராயிலோ

அ. இராமர்லட்சுமணர்சாம்புவான்சுக்ரீவன்அனுமான்
இறைஞ்சும்உசாத்தானமோ-அன்றி
எழில்ஆபஸ்தம்பரிஷி முதலியோர்பூஜையா
லிலங்குராலூர்மயானமோ

விருத்தம்.

இன்னணம்பெருந்தலங்கள் இருப்பினுமுனிவர்சூழ்ந்தே
உன்னியதவத்தைச்செய்ய வொட்டார்மல்நமைதடுப்பர்
என்னமெய்க்கொன்றைசொன்ன வியல்பினைக்கேட்டவன்னி
மன்னுமற்றையதலங்கள் மகிமைசொல்கின்றதாமே.

இராகம்-புன்னாகவராளி-அடதாளம்

கண்ணிகள்.

சுரர்அமுதம்பெற்றுமகிழ்ந்து தொழுங்கலையனல் லூரோ
சுகமுனிகற்கரிஷிமுதலோர் துதிசெய்பூவ னூரோ
தெத்தாத்த்ரேயமஹாரிஷியாதி சேரும்வெண்ணி யூரோ
தேவர்கள்குச்சரரிசிஅர்ச்சித்த திருக்கோட்டுரேன் றிரோ
காசிபரிஷியும்மற்றையருந்தொழுங் கடுவாய்க்கரைப்பூத் தூரோ
கார்வருணன்அமரர்அர்ச்சித்துக் களிக்குமீயச் சூரோ
ஆதிசைவபுகழ்த்துணையார் அரிசிற்கரைப்புத் தூரோ
அமரர்குருஅர்ச்சனைசெய்த அந்ததேவூர் நேரோ

பைரவரிஷிமலர்கள் தூவிப் பரவினப்பயற் றூரோ
பரவைநாயகன்செங்கல்லைத் தங்கமாய்ப்பார்த்தபூம்புக லூரோ

அந்தலக்ஷுமிமுசுகுந்தச்சக்ரவர்த்தி அணிதிருப்பனை யூரோ
அரிவராகமாயர்ச்சனைசெய்த அவணிவணல் லூரோ

உமையவளும்பூஜைசெய்த உயர்பெருவே ளூரோ
ஓடம்ஓட்டினபதிகம்சம்பந்த ருரைத்தகொள்ளம்பூ தூரோ

அனலில்வேகாப்பதிகம்பெற்ற அந்நளராஜன்நள் ளாறோ
அமரரும்அயிராவதமும் அர்ச்சித்ததிருக்கோட் டாறோ

விருத்தம்.

தில்லையம்பலத்துளாடுந் தேவன்வாழ்தலங்கள் தன்னைச்
சொல்லியவன்னியங்குசூழ்வர வனைத்துங்கூடி
நல்லதோர்தவத்தைச்செய்ய நமக்கிடந்தாராதென்ன
வல்லதோர்தேவதாரம் மற்றுளஸ்தலங்கள்சொல்லும்.

தரு-இராகம்-உசேனி-அடதாளம்.

கண்ணிகள்.

க. சிறுத்தொண்டதேவர் அவதாரஞ்செய்த சிவசாம்பசிவா
செங்காட்டங்குடி கணபதீச்சரமோ
வெறுக்கைசேர்மிரு கண்டர்மார்க்கண்டேயர் ஸ்ரீராமரும்
விண்ணோரும்அர்ச்சித்த இராமனதீச்சுரமோ

உ. மூத்தபதிகம் உரைத்தகாரைக்கால் அம்மையும்பிருகு
முனியும் சௌமியுந் தொழுங்காரைக்காலோ
பார்த்தசாரதிவெண்ணெய் கவர்ந்துண்டபாவம்ஒழிக்கப்
பரிவுடன் அர்ச்சித்ததிருச்சிக்கல்மேலோ

௩. அரவந்தீண்டியே யிறந்தவணிகனை ஞானசம்பந்தர்
அழைத்துமணத்தை முடித்தமருகலோ
வருணன்முதலோர் வணங்கும்பேரெயிலோ அயன்சரஸ்வதி
வாழ்த்துமீயச்சூரிளங்கோயிலிகலோ

ச. முருகநாயனார் அவதாரஸ்தலமாய் மேகங்கள்தொழும்
முன்னவன்புகலூர் வர்த்தமானீச்சுரமோ
பெருமைசேர்ஆதி சேஷன்முதலோரும் பூஜித்துநல்ல
பேறுபெற்றதோர் பாதாளேஸ்வரமோ

ரு. குண்டையூர்நெல்லை சுந்தரர்க்களைப்பித்து அளித்துமமுசு
குந்தசக்ரவர்த்தி வந்திக்கும் கோளிலியோ
தொண்டராகியசற்குணராஜனைப் பிறவிசாகரந்
தொலைத்தருளின திருக்கருவிலியோ

சூ. சூரன்முதலோனை ஜெயம்பெறவிந்த்ரன் மலர்கள்தூவித்
தோத்திரஞ்செய்த செம்பொன்பள்ளியோ
சீருறு அஷ்டவசுக்களாதியோர் வாழ்த்தி இஷ்ட
சித்திதனைப்பெற்ற திருநளிபள்ளியோ

விருத்தம்.

புகலூநற்றலங்கள்யாவும் பொன்னுலகத்தோர்சூழ்ந்தே
யிகல்நமக்கியற்றுவாறென் றெழில்தேவதாரஞ்சொல்ல
மகிமைதங்கியமர்தாரை மங்கைபாகனைத்துதித்தங்
ககமகிழ்ந்தமலன்வாழும் அருந்தலம்விளம்புமம்மா.

தரு-இராகம்-முகாரி-தாளம்-ஆதி

க. கற்பகப்பிள்ளையார் அர்ச்சனைசெய்துமாங்
கனிபெற்றகடிக்குளமோ
பொற்புறுவலியான் காரணரிஷியும்
பூஜித்தவலிவலமோ

உ. சாற்றும்அஷ்டகஜங்கள் திக்குப்பாலகர்களுந்
தாழ்ந்ததலைச்சங்காடோ
தேற்றமாய்முயலகன் முதுகின்மேல்அண்ணலாடுந்
திருத்தலையாலங்காடோ

ங. சுற்றத்தாரைத்துணித்த கோட்புலியார்தோன்றித்
தொழுநாட்டியத்தான்குடியோ
கற்றகௌசிகமுனி முதலானோர்மலர்தூவிக்
களித்திடும் ஆலங்குடியோ

ச. அருள்வித்தராகிய அந்தணர்க்குபதேசம்
அண்ணல்செய்யிளநகரோ
பெருமையுறுபராசர் காளவர்பேரருள்
பெற்றிடுந்திருக்களரோ

ரு. உதயன்ஒளிமழுங்கப் பூஜைசெய்துப்ரகாசம்
உற்றதோர்நன்னிலமோ

அதஞ்செய்தபன்றியின்கொம்பை முறித்தணிந்த
அரித்துவாரமங்கலமோ

சு. விற்பன்னர்சம்பந்தர் யாழ்மூறிப்பதிகம்
விரித்ததருமபுரமோ
நற்சௌந்தரேசனாதனதன் உம்பர் அர்ச்சித்த
நறையூர்சித்தீச்சுரமோ

எ. சுந்தரர் திருக்குளமூழ்கி நோயைத்தொலைத்த
துருத்தியெனுங்குற்றாலமோ
இந்த்ராணியையிழுத்த அஜமுகிஅஸ்தந்தன்னை
யெறிந்தஅம்பர்மாகாளமோ

அ. தினந்தோறும்வாயுதேவன் தேவர்களும்பூஜிக்குந்
திருக்கோடிக்குழகரோ
அனவரதமும்பதஞ்சலி முசுகுந்தரும்
அர்ச்சித்திடும்விளமரோ

விருத்தம்.

வள்ளலார்மணத்தைக்கண்ட மாதவத்தோர்கட்கெல்லாங்
கொள்ளையாய்ச்சிவலோகத்தைக் கொடுத்தபெம்மான்றலங்கள்
உள்ளவாறுய்மந்தாரை உரைத்தும்பொன்னிறைந்ததென்று
மெள்ளவேகாட்ட ஆத்திவிளம்பலுற்றதுவெவ்வேறே.

இ-ம். காம்போதி-முகாரி-அடதாளம்.

பல்லவி.

தக்கஸ்தலம்யாதோ அதைச்சாற்ற ஒண்ணுதோ

அநுபல்லவி.

ஒக்கதமையாதோ நமதுள்ளமகிழாதோ (தக்க)

சரணங்கள்.

அய்யனூர்தெங்கூரோ குரு அர்ச்சித்ததேவூரோ
தெய்வவன்னியூரோஅட்சய தேவர்கீழ்வேளூரோ (தக்க)

மால்வலம்புரமோசேஷன் மருவும்பாம்புரமோ
மேல்கொண்டீஸ்வரமோஅயன் மேவுஞ்சிவபுரமோ (தக்க)

செவ்வாய்சிறுகுடியோ கௌசிகர்கருக்குடியோ
அவ்வேட்டக்குடியோ சலந்த்ராசுரன்விற்குடியோ (தக்க)

விருத்தம்.

மலைமகள்கணவனியார்க்கு மாத்திரைப்பொழுதில்தானே
தலையளியளிக்குந்திவ்ய ஸ்தலங்களைச்சொன்ன ஆத்தி
கலகங்கள்காலதத்துவ கண்டகன்செய்வானென்ன
இலகியகுருந்திங்கிப்பால் யியம்பிடலுற்றதாமே.

கண்ணிகள்.

இராகம்-புன்னாகவராளி-அடதாளம்.

அகஸ்தியர்முதலருந்தவத்தோர் அமரருமலர்கள் தூவி
அர்ச்சித்த அகத்தியான்பள்ளிபோ யாற்றலாந்தவ மேவி
சகஸ்திரமலரால்மாயோன்பூஜிப்பச் சக்கரமளித்த வீழி
சம்பந்தர்க்குவாசிதீரப்பொற்காசு தந்தவெந்தைசதா வாழி
திரணவிந்துமாமுனிவர்பூஜை செய்ததிருக்கைச் சின்னம்
திருநெல்லிக்காதாருகமுனிவர் தெரிந்துபூஜித்தார் முன்னம்
இடும்பாசூரன்பூஜைசெய்த இனியவிடும்பா வனமோ
இராமர்தற்பணஞ்செய்தமதிமுத்தம் ஏற்றதாய்க்கொள்ள மனமோ
வாஞ்சையால்நாககன்னிகைபூஜித்து வணங்கினவாஞ் சயமோ
மனைவியைத்தள்ளினநீலநக்கர்சாத்த மங்கையிற்றங்கவும் பயமோ
மூர்க்கமஹாரிஷிபூஜித்தப்பள்ளியின் முக்கூடல்நகர் நேரோ
முறையாய்ச்சிறப்புலிபஞ்சாக்ஷரத்த மொழிந்ததிருவாக் கூரோ
தனஞ்சயனெடுபோர்செய்துவில்லடி சார்ந்ததெளிச்சேரித் தலமோ
சசிதரன்ஆமைஓட்டையணிந்த தண்டலைநீணெறி நலமோ
அத்ரிமஹாரிஷிவியாசரிஷியாதி அடுத்தசிற்றேமப் பதியோ
அழகியதௌமியரர்ச்சித்திடுஞ்சேறை அடுத்திருக்கின்றது நதியோ

விருத்தம்.

ஓதினஸ்தலங்களெல்லாம் யோசிக்கில்சுலபங்காணும்
ஆதலால்காஞ்சியன்றி யடையாதென்றேகுருந்தம்
காதலால்விளம்பவங்குக் கடும்பகையாகக்கம்டை
யாதிகளுளதென்றத்தி யாலோசித்தருளுற்றானே.

இராகம்-ஆகிரி-ஆதிதாளம்
கண்ணிகள்.

க. அழகுறும்அத்தலத்தில் கம்பாநதிசெய்தவம்
அதனைத்தடுக்கவுமை யாளுங்
தழுவமுலைத்தழும்பும் வளைத்தழும்புங்கம்பர்
தாங்கொண்டிருக்கின்றாரெங் நாளும்
உ. வேகவதிபாலியாறு மஞ்சள்நீராறு
மீறிஅலைகடலில் சேர்க்கும்
ஆகையாலித்தலத்தில் யோகதவஞ்செய்வதற்
கடுக்கமாட்டாதுநம்மில் யார்க்கும்
ங. ஆழியோன்வாழும்அஸ்த கிரியேமலைவேறில்லை
ஆதலாலுண்டோ பாங்கே
சூழும்எழுகடல்போல் எழுந்திபெருக்கு
தொன்றுதொட்டுள்ள தாங்கே
ச. எங்குள்ளதீர்த்தமும் அங்கேசர்வதீர்த்தமா
யென்றும்வந்திருக் கின்றதே
மங்கலதீர்த்தமுத லங்கேகோடிதீர்த்தங்கள்
மருவிநிலைத்து நின்றதே
ரு. எல்லாவுலகுந்தொழும் வல்லவிசனைக்கல்லா
லெறிந்தார்சாக்கிய ராங்கே
கொல்லும்பொல்லாக்கல்மேல் நல்லதன்றலைமோதுங்
குறிப்புதொண்டரும் ஆங்கே
சா. எங்கும்லிங்கமயமாய்ச் சாளிக்கிராமமாக
விருப்பதாலிட மேது
அங்கேசொர்க்கபிலமும் பதுமன்பிலமுமுண்டு
அலறுவோந்தவ றேது
எ. திரிமூர்த்தியும்வளஞ்செய் காமக்கோட்டத்தினுச்ரம்
சிந்திக்கதிகி லாமே
ஒருகல்லின்பரிசத்தால் அருட்பொன்விஸ்தாரமாய்ச்
ஒழியாவானசயுண் டாமே
அ. அஷ்டபர்வதங்கள்போல் கிருஷ்ணதேவர்கோபுர
மாதிகள்விஸ் தாரம்

துஷ்டமதயானையை விட்டோடச்செய்யுமுயல்
துன்பமாம்ஆர வாரம்

விருத்தம்.

நதிகளேசூழ்கச்சிக்க ணுந்தவஞ்செய்வோமாகில்
கதிசமுத்திரமேயென்று கதறியேயாத்திசொல்லத்
துதிபெறுங்காஞ்சிநல்ல சொர்க்கத்திற்சிறந்ததென்றும்
பதிகளிற்சிறந்ததென்றும் பகருநற்குருந்தன்பாலே.

இராகம்-ஆகிரி-ஆதிதாளம்

கண்ணிகள்.

௧. இச்செகந்தன்னிலுள்ளக் கச்சிமாநகர்க்கிணை
இமையோர்சொர்க்கந்தானுமோ
நிச்சயித்தனயன் வைச்சிரண்டும்நிறுத்தே
நினைத்தளவிட னாமோ

௨. ஜலப்ரளயந்துளியும் புலப்படாமல்ப்ரளய
சத்தியுங்காவலத் தலமே
தலப்புராணமுதற் பல்வகைப்புராணமுமிகத்
தான்புகழ்வதும்அன்ன தலமே

௩, எத்திசையிலும்எழு சத்திக்காவலும்வேலுக்
கிறைவர்காவலுங்கச்சித் தலமே
அத்திமுகவன்காவல் வைரவனுர்காவல்
அய்யனுர்காவலும்அத் தலமே

௪. ஆலாலமுண்டவர்க்கு ஞாலத்திலாயிரத்தெட்
டாகுமென்பர்தேவ குலமே
நாலுலக்ஷத்தன்பதி னாயிரங்காஞ்சிமா
நகரினிலுள்ள தலமே

௫. நித்யோற்சவச்சிறப்பு மெத்தனேயோகோடி
நிலத்தில்பெரிதுகச்சித் தலமே
பத்ரகாளிகாவலுஞ் சித்ரகுப்தன்கோவிலும்
ருத்ரசோலையுங்கச்சித் தலமே

௬. யாருங்காணுத அய்யர் ஈராழிநெல்லம்மைக்கு
அளந்தவிடமுங்கச்சித் தலமே

காராளர்க்கீந்ததனை ஏராற்பெருக்கிஎண்ணூன்
கறமுஞ்செய்ததுங்கச்சித் தலமே

எ. வேதமோதுமறையோர் வீதிகளோஅனந்தம்
வேள்விவிஸ்தாரங்கச்சித் தலமே
ஆதிநாதனைத்தீண்டும் ஆதிசைவரனந்தம
ஆகமச்சங்கங்கச்சித் தலமே

அ. பாடச்சுந்தரர்க்கோர்கண் கூடச்செய்ததுங்கோடி
பவமும்புண்யமாங்கச்சித் தலமே
ஆடல்பாடல்மகிழ்வால் அமரர்களுமிச்சிக்கும்
அரம்பையர்வாழ்வுங்கச்சித் தலமே

கூ. சொல்லுமிம்மகிமையால் எல்லாத்தேவருந்தவந்
தொடுத்துச்செய்ததுங்கச்சித் தலமே
நல்லகம்பமும்வெள்ளக்கம்பங் கள்ளக்கம்பமும்
நண்ணும்ஏகம்பங்கச்சித் தலமே

கொச்சகம்.

செருந்துமகிழ்ந்தேநமக்கோர் குறையுண்டோகாஞ்சிதனி
லிருந்திடிலென்றதன்மகிமை யியம்பினதைக்கேள்வியுற்றே
அருந்தவமங்கியற்றுவதே யழகெனஸ்ரீகைலைதனைப்
பிரிந்துபின்னர்யாத்திரையைப் பேசினகல்லால்மரமே

கண்ணிகள்.

க. கங்கைதுங்கபத்திரி யெங்குள்ளநதிகளும்
எக்காலும்வெறுப்புற் றுலும்
பங்குனிமாதமிது எங்கும்பெருக்கிராது
பகையைச்செய்யாதோர் காலும்

உ. அரியசமயமிது யாத்ராதானமுஞ்செய்தோம்
யாம்பிரயாணத்தை நாடினோம்
சுரர்நரராதிகள் துதிக்குங்கங்கையடைந்து
தொழுதுதீர்த்தங்கள் ஆடினோம்

ங. துங்கபத்ரையமுனை சரஸ்வதிநர்மதை
தூயகோதாவரி சிந்து
எங்கும்புகழுங்கிருஷ்ணை பொங்குநீருமாடினோ
மிப்பால்வேகமாய் வந்து

௪. அங்கவங்ககலிங்க காஸ்மீரகாம்போஜம்
ஆந்தரகாந்தாரம்கூர்ச் சரம்
சிங்களம்கேகயம் அருணஞ்சோனகஞ்
சீனம்திராவிடம்பாண்டிபப் பரம்

௫. வங்காளம்சூரசேனம் துளுவம்கேரளம்மச்சம்
மாளவம்மலை யாளம்
கொங்கணம்தெங்கணம் குருகுக்தளம்குரு
குடகம்கொல்லம்கே பாளம்

௬. கன்னடம்யுகந்தரம் க்ராடம்போடம்மராடம்
காசங்கோசலங் குலிந்தம்
கன்னடம்மகதமிலாடம் ஒட்டியம்சகம்
கருசம்அவந்தி புலிந்தம்

௭. பல்லவம்சாலவம் சவ்வீரம்விதர்ப்பம்
பாஞ்சாலம்சிந்து யவனம்
சொல்லரும்மிடதமும் பார்த்தோம்சோழதேசத்தால்
துதிபெற்றஇந்த புவனம்

விருத்தம்.

கங்கைமுதல்தீர்த்தமெலாமாடிப்பாடிக்
கலிங்கமுதல்தேயமெலாங்கண்டுக்ஷேத்ரம்
துங்கமிகுவடக்கைத்துசோழம்நூற்றுத்
தொண்ணூறுமலைஒன்று துளுவமொன்று
கொங்கேழுநடுநாட்டிலிருபான்ரெண்டு
குன்றாதபாண்டிபதினான்காம்ஈழம்
அங்கிரண்டும்தொண்டைமுப்பானிரண்டும்கல்லால்
யாத்திரைக்காமென்றுசொல்லஅமைந்ததாமே.

கண்ணிகள்.

பணிந்தோம்வெள்ளியங்கிரிஎன்னும் திருக்கைலாயம் மூவர்
பதிகங்களோதினோம் பரகதியாளச் சகாயம்
பார்வதியாரோடு மான்மழுசதுர்ப்புஜ காள கண்ட
பஸ்மருத்ராக்ஷதரராய் திரிநேத்ரங்கள் நீள
செஞ்சடாதரகங்கா தரசந்த்ரசேகர தேக மேவுஞ்
சிவபெருமான் தருமரிஷபாரூட ராக

பிரம்மவிந்த்ராதி பிரமதகணங்கள் சேவிப்ப கையில்
பிரம்புதாங்கிநந்தி எம்பெருமான் விசாரிப்ப
அற்புதஅந்தாதி திருவிரட்டை மணிமாலை அருள்செய்
தம்மையார்தலையால் நடந்தடைந்தாரே அக்காலை
ஆரூரருடனெழுந்தருளிய சேரமான் ஞான உலா
அரங்கேற்றினஸ்தலம் ஜனகாதிமுனிவர்க ளான
நால்வருங்கல்லாலின் கீழ்பெற்றனர் உபதேசம் திரு
நாவுக்கரசரும் ஐயாற்றில்கண்ட கைலாசம்
இப்பால்நாரதருண்ட தீர்த்தந்தங்கும் கேதாரம் இது
இமையவர்கள்ஆறுமாதம் பூஜிக்க ஆதாரம்
தொழுதோம்அநேகதந் காபதங்காவத தீர்த்தம் சந்திர
சூரியர்பூஜித்த அருள்மன்னவீஸ்வர மூர்த்தம்
இந்த்ரநீலபருப்பத மிந்த்ரதீர்த்தத்நி லாடி விஜயன்
இறைஞ்சிமகிழ்ந்தனன் பாசுபதாஸ்திரந் தேடி
ஈதுகங்காநதி தீர்த்தமிதுகாசி க்ஷேத்ரம் இங்கு
இருந்துதவஞ்செய்தால்போதும் ஒருக்ஷண மாத்ரம்
முறையேஅறுபத்துநான்கு கடங்களும் ஸ்நானம் செய்து
முடித்தோம்பூஜையைக்கொடுத்தோமளவற்றதானம்
திருநந்திதேவர்பூஜித்த ஸ்ரீசைல மிப்போது தங்கிச்
சேவித்தோம்சித்திக்கும் கீர்த்திதவண்ணர் தப்பாது
துதிசேர்வடநாட்டுப் பதிகள்பரவியே பேர்ந்தோம் இப்பால்
துளுவநாட்டில்வானோர் சூழ்ந்திடுங்கோகர்ணஞ்சார்ந்தோம்
கயிலையில்இராவணன்பெற்ற சிவலிங்கம் வாங்கி நமது
கணபதிஸ்தாபிக்க மகாபலமாயின ஓங்கி
அமரர்கள்அமுதுண்ண அண்ணலார்நஞ்சுண்ட கூடல்-வானோர்
அர்ச்சித்ததைக்கேட்டு அடைந்தோம்மகிழ்ந்தாடல் பாடல்

விருத்தம்.

ஒப்பிலாக்கைலையாதி யுத்தரதேசத்திதங்கள்
அப்பன்வாழ்ஸ்தலங்கள்யாவும் யாத்திரைபுரிந்தோமல்லால்
செப்பமாய்த் துளுவமீதயஞ் சேர்ந்துசேவித்துவந்தோம்
இப்போதுதொண்டைநாட்டி லெந்தையைவந்திப்போமே.

கண்ணிகள்.

க. மூவுலகமூர்தென்கைலாயமென்றுதுதித்து
மொழிகின்ற திருக்காளத்தி-சொர்ன

முகரிநதிநீரில் மூழ்கிசிவபூஜை
முடித்துப்பெற்றோம் இஷ்டசித்தி

உ. சிலந்திபாம்புயானை தெய்வீகநற்கீரர்
சிவகோசரியாரும் இன்னம்-பூஜை
செய்துபெற்றனர்முக்தியாண்டவரில்விஜயன்
சிறந்தகண்ணப்பராய் முன்னம்

௩. தணிகாசலபதிவாழுந் திருத்தணி
சார்ந்திறைஞ்சினேம்பூஜைபுரிந்து-உயுத்தம்
தணிந்தஸ்தலமிதுநித்யம் நீலோற்பலம்
தண்ஜுனையில்மலரும் விரிந்து

௪. திருக்கள்ளில்எனுந்தலஞ்சேர்ந்தோமிதுநந்தி
தீர்த்தம் மூழ்கிப்பெற்றோம் கீர்த்தி-எங்கள்
சிவானந்தவீசனை பிருகுரிஷிபூஜிக்கச்
சித்தித்தார்தக்ஷணமூர்த்தி

௫. ஊன்றுகோல்சுந்தர மூர்த்திக்குதவின
ஒப்பிலாத்திருவெண்பாக்கம்-மறை
ஓதுஞ்சதானந்த மகாரிஷிபூஜித்து
உற்றனரேகிருபா நோக்கம்

௬. மூங்கிலடியிலெந்தை ஓங்குஞ்சிவலிங்கமாய்
முளைத்தருளினபாசூரீது-வியாச
முனிஅர்ச்சித்திடவீசன்பாம்பாட்டியாய்சோழன்
முன்வந்தருளினாரப்போது

௭. ஆண்டவன்காளியை ஊர்த்ததாண்டவத்தினால்
அடக்கினதிருவாலங்காடு-இதில்
ஆற்றும்நடனத்தைப் பார்த்திடுங்காரைக்கா
லம்மையார்தமக்குண்டோயீடு

அ. தேவேந்திரன்ஆதிசேஷன்சுனந்தரர்
தேவரும்அர்ச்சித்தார்முன்னாள்-ஞானச்
செல்வவான்களான பழையனூராரோடு
சிவபூஜைநடத்தினோமிந்நாள்

௯. பாற்கடல்போல்மோக்ஷதீர்த்தம் ரத்னசபை
பணிந்தோர்க்கருளும் பலாவிருக்ஷம்-செட்டி

பழிக்காகத்துணிந்தெழு பதின்மரும்தீக்குழி
பாய்ந்தவேளாளர்சீர்லக்ஷம்

விருத்தம்.

திருப்பதிகம்சம்பந்தராதிமூவர்
செய்தலட்சத்திராயிரத்திலிப்போ
திருப்பதுதாமெழுநூற்றுத்தொண்ணூற்றேழு
மியம்புபதியிருநூற்றேடெபூபானுன்கில்
பருப்பதமேமுதலாகப்பரமன்வாழும்
பலதலங்கள்பணிந்தாலங்காடும்பார்த்தோம்
விருப்பமுடனேதிருவிற்கோலமாதி
வேண்டுவோம்பிறவிதனைத்தாண்டுவோமே.

கண்ணிகள்.

செல்வநிறைந்ததிரிபுராந்தகவீசர்கூவம்-என்னுந்
திருவிற்கோலத்தில் காண்கின்றோம்விசேஷப்பிரபாவம்
புரங்கள்மூன்றுமீசன் எரித்ததனால்வானோர்கூடித்-தொழுது
பூஜித்தஸ்தலமிதுசக்தியுமீசனைநாடி
வாய்த்ததொண்ணூற்ருறு கீர்த்தியும்பெற்றதோர்கூட்டம்-தொண்
மண்டலத்துச்சதகந்தனில் கேட்கக்கொண்டாட்டம் [டை
பாவத்தைத்தீர்த்திடுங்கூவ தீர்த்தத்தினிலாடிப்-பூஜை
பக்தியுடன்செய்யச்சித்தித்ததுமுத்திநாடிச்
சந்த்ரசேகரரிலம்பையங்கோட்டூர்ச் சந்த்ர தீர்த்தம்-பூர்வம்
சந்திரர்பூஜித்தஸ்தலம்என்று சொல்வதெதார்த்தம்
ஊறலென்றுரைக்குந் தக்கோலநந்திதேவர்வாயில்-நாளும்
ஊறுவதுகங்கை உமையர்ச்சித்தவீசன்கோயில்
மாயோன்சக்கரம்பெறப் பூசித்ததிருமாற்பேறு-நாம்
வருந்திப்பூசித்ததால் வாராதுநமக்கிடையூறு
வல்லாளராஜன்பூசித்த வல்லநாதர்வல்லம்-அன்பால்
வந்தித்துநவக்கிரஹங்கள் பூசித்தடைந்தனவில்லம்
மார்க்கசகாவீசர் வாழ்விரிஞ்சிபுரமீது-முடி
வணங்கிக்கொடுத்து மகிழ்ந்திருக்கின்றார்மாறாது
கண்ணுவரிஷிபனம் பழம்நிவேதித்தவன்பார்த்தான்-பணங்
காட்டூர்பணிந்ததானமது வல்வினையீசன்தீர்த்தான்

தரிசித்தோர்திருவேரத்தூர் ஆண்பனேபெண்பனேயாகச்-செய்து ஸ்தாபித்தார்சம்பந்தர்சைவ சமயம்உயர்வாக

விருத்தம்.

செகமனைத்தும்புகழ்காஞ்சிமண்டலத்தில்
திகழ்பம்பாய்நோயதுதான்சேராவண்ணம்
சுகம்விழாதீபலட்சங்காமக்கோட்டம்
மண்ணிடவேசிறப்பித்துச்சென்னேவாழும்
திகழ்நேத்தப்பாக்கமுனிசாமிச்செவ்வேள்
திருவொற்றிமாநகரிலன்புகாட்டி
மிகமகிழத்தந்தபொருள்தன்னேக்கொண்டு
விளங்குமாகறல்சேர்ந்தோம்வினைதீர்ந்தோமே.

இராகம்-மத்யமாவதி-ஆதிதாளம்

பல்லவி.

பணிந்துபாடினேம் ப்ரபந்தம் இதனுல் பரகதிமக்குச்சொந்தம்

அநுபல்லவி.

துணிந்துசேய்நதி மூழ்கித்தொல்லேவினைதொலேத்துத்
துதிசேர்திருமாகறல் பதியிற்றங்கி நிலேத்து (பணி)

சரணங்கள்.

க. படைக்கஞ்சாதகடகாசூரனைவெல்லவிந்த்ரன்
பரிந்துசிவார்ச்சனைபுரிந்தான் மகிழ்ச்சிகொண்டு
அடைக்கலங்காத்தவர் புவனநாயகியம்பாள்
ஆக்ஷிகொண்டவிங்கர் காட்சிமுழுதுங்கண்டு (பணி)

உ. ஆகமம்ஆய்ந்தோர்வாழ் மாகறல்பிரிந்துசேய்
ஆற்றங்கரையிளையனூர் வேலூர்அற்புதம்
யாகங்காசிபரிஷியாற்ற அதனைக்காய்ந்த
அரக்கர்மாகறன்மலேயானேக்கொன்றவேள்பதம் (பணி)

ந. கொந்தலர்பூங்கச்சிக்குமர கோட்டக்கடவுள்
கூறும்அரக்கர்தம்மைக்கொன்ற கடம்பர்கோயில்
வந்திறைஞ்சினதல்லால் பெருநகரமுங்கண்டு
மறையவன்பூஜித்த பிரமபுரேசர்வாயில் (பணி)

விருத்தம்.

தொண்டைமண்டலசதகம் உரைசெய்த
அகஸ்தியப்பன் தோட்டந்தன்னைக்
கண்டோம்செய்யாற்றுத் தென்கரைதனிலே
காசிராமேசஞ்செல்லும்
பண்டுளபாட்டையில்சத்ரம் அமைத்தபெரு
நகர்விட்டுப்பாலியாற்றைக்
கொண்டகுரங்கணில்முட்டம் கூடினேம்
புகழ்ந்துகூத்தாடினேமே.

இராகம்-சுருட்டி-ரூபகதாளம்.

பல்லவி.

வரங்கிடைத்திடுமே ஜென்மவழியடைத்திடுமே தப்பாது

அநுபல்லவி.

கரங்கள்கூப்பியே குரங்கணில்முட்டங்
கர்த்தனைக்காணச்சித்தித்த அதிஷ்டம் (வரங்)

சரணங்கள்.

௧. அங்கதன்தொட்டிலில் ராவணனுடைய
ஆட்டினவாலி அத்தனுருடைய (வரங்)

௨. மணிகண்டரான வாலீசர்மேலே
அணில்மலர்தூவி அருள்பெற்றதாலே (வரங்)

௩. காகமேநீண்டதடாகம் உண்டுயண்ணி
ஆகமொறிநின்றருள்பெற்றதெண்ணி (வரங்)

விருத்தம்.

போற்றினேம்வாலீசர் புகழிறையார்
வளையம்மைப்பொற்பதப்பால்
ஆற்றுத்தென்கரை அணுகிஅர்ச்சித்தோம்
இச்செகத்திலரியகாஞ்சிக்
கேற்றதொருதர்மகர்த்தா முனிசாமி
வேள்கீர்த்திக்கிணைபோல் எங்குந்
தோற்றுகின்றபெரியகோபுரங்கண்டோம்
வலிதாயஞ்சூழ்ந்தோமாதோ.

இ-ம். சுருட்டி-அடதாளம்.

பல்லவி.

எலியே சக்ரவர்த்தியாயுலகத்தை யாண்டதால்
இறைஞ்சினோம்நாமும் அன்பால்

அநுபல்லவி.

வலிதாயமெனும்பாடி வந்தனுகினேங்கூடிச்
சலியாமற்றாயம்மை தற்பரனருணடி (எலி)

சரணங்கள்.

௧. அனுமான்பிரகஸ்பதி அர்ச்சித்தவலிதாயம்
அமரர்மகிழ்ந்து துதி ஆற்றுந்தென்கைலாயம்
அனுமதீர்த்தம்படிய அகலும்பிரபஞ்சமாயம்
அஞ்சலிசெய்தோர்க்கில்லை சஞ்சிதத்தோடபாயம் (எலி)

௨. தொண்டைமான்யானையாற் கண்டமுல்லைவாயில்
சுற்றும்முல்லைக்கொடியை வெட்டினவடுவுண்டு
சண்டைசெய்தஅரசன் ஜயம்பெற்றான்நந்தியால்
ஸ்தாபித்தவெள்ளெருக்கு ஸ்தம்பமிதோயிரண்டு (எலி)

௩. வேலவன்பூஜித்த வேற்காட்டேஸ்வரர்
வேற்கண்ணித்தாயாரும் விரும்பியவேற்காடு
மூலநாள்கார்த்திகை மாதத்தில்முத்திபெற்ற
மூர்க்கநாயனர் அமுதூட்டினருண்மையோடு (எலி)

விருத்தம்.

நல்லகாசியில்கிடைத்த நவரத்னவிசேஷத்தாலே
முல்லைவாய்த்தலத்தில்வயிர முடிகள்முன்னூறிழைத்தோம்
தில்லைவாழ்நடராஜர்க்குச் சிம்மகண்டிகளுஞ்செய்தோம்
சொல்லருமொற்றியூரைச் சூழ்கின்றோம்வாழ்கின்றோமே.

இராகம்-ஆரபி-தாளம்-ரூபகம்

கண்ணிகள்.

௧. மாணிக்கத்தியாகேசர் வாழுந்திருவொற்றியூர்
வந்துசேர்ந்தோமிப்போது அன்பர்களே
காணற்கரியஆதி சேஷனும்அர்ச்சித்தனர்
கலிநீதி அவதாரம் அன்பர்களே

உ. அலைவாய்தீர்த்தம்கிருபா தீர்த்தமாடி அர்ச்சித்து
அண்ணலானைத்தொழுதோம் அன்பர்களே
கலைசேர்சங்கிலியாளை மகிழ்ந்தால்சுந்தரமூர்த்தி
கல்யாணஞ்செய்தஸ்தலம் அன்பர்களே

ங. திருவெண்காடரென்னும் பட்டினத்துப்பிள்ளையார்
சிவலிங்கமானஸ்தலம் அன்பர்களே
மருவழகியசென்னை மாநகரமும்பார்த்து
மயிலைப்பதிக்குவந்தோம் அன்பர்களே

ச. புன்னைமரத்தடியில் அன்னையார்மயிலாகிப்
பூஜித்தஸ்தலமிது அன்பர்களே
முன்னம்ஞானசம்பந்தர் என்பைபெண்ணாக்கின
மூழக்கந்தனையுங்கேட்டோம் அன்பர்களே

ரு. நலமல்கும்வேளாள மரபினில்வாயிலார்
நாயனார்அவதாரம் அன்பர்களே
அலகில்தெய்வப்புலமை திருவள்ளுவநாயனார்
ஆகூஷிபெற்றனரிங்கு அன்பர்களே

சு. வான்மீகரிஷிகாண நடனஞ்செய்கின்றதிரு
வான்மியூரணுகினேம் அன்பர்களே
தானகப்பால்சொரிந்து ஆன்பூஜித்துமுக்தி
சார்ந்தகயப்புஸ்தலம் அன்பர்களே

எ. வித்யாதரர்பூஜித்த கச்சூராலக்கோயிலை
விதிப்படியிறைஞ்சினேம் அன்பர்களே
அத்தன்யாசித்தளித்த அமுதுண்டுபசிதன்னை
அகற்றினர்நாவலூரர் அன்பர்களே

அ. வனப்புறமிடைச்சுரம் வந்தனைசெய்துநந்தி
மலைமகிமையுங்கண்டோம் அன்பர்களே
சனற்குமாரரிஷி கௌதமரிஷியாதி
சார்ந்துபூஜித்தஸ்தலம் அன்பர்களே

கூ. தேவர்சித்தரர்ச்சித்து வேலவன்க்ருபைபெற்ற
திருப்போரூர்பரவினேம் அன்பர்களே
சேவல்மயில்கள்லக்ஷம் செலுத்தியும்
திருப்புகழ்செப்பியும் விடைபெற்றோம் அன்பர்களே

விருத்தம்.

ஆரூரர்க்கண்ணலார் சங்கிலியைமணஞ்செய்வித்தளித்தவொற்றி
யூரதனில்பட்டினத்துப்பிள்ளை சிவலிங்கமாயுற்பவித்த
பேரருளின்காக்ஷியொடுமயிலேயிடைச்சுரங்களின்ப்ரபாவங்கண்டு
போரூரைப்பிரிந்துதிருக்கழுக்குன்றமகிமைகண்டு போற்றலானோம்.

இராகம்-முகாரி-ரூபகம்-தாளம்

கண்ணிகள்.

பணிந்தோம்திருக்கழுக்குன்றத்தைப் பார்த்தோம்பக்ஷி தீர்த்தம்
அணிந்தோம்இந்த்ரவசுதீர்த்தங்கள் ஆடினோம்சங்கு தீர்த்தம்
முறையாய்அனுஷ்டானஞ்செய்து முடித்தோம்சிவ பூசை
மறைநான்குமேமலேயாய்நிற்கும் மகிமையன்றோபிர யாசை
அர்ச்சித்தார்திருநந்திதேவரிந்த்ராதிஅஷ்ட வசுக்கள்
வர்ச்சித்தார்துயர்ருத்ரகோடிகள் வசிஷ்டர்மன்னர் கழுக்கள்
முருகர்அகஸ்தியர்கௌசிகர் ஜனகர்சம்பு முனியும்
வருணன்சப்தமாதர்அக லிகைமார்க்கண்ட முனியும்
அருஞ்சண்டப்பிர சண்டன்அர்ச்சித் தடைந்தார்கிரேதா யுகத்தில்
வரும்பக்ஷிசடாயுசம் பாதிமறு யுகத்தில்
யுகமூன்றில்சம்புகுத்தன்மா குத்தன்உற்றார் பேறு
புகழ்சேர்சம்புஆதி கதிபுகுவார்கலி யீறு
கண்டோம்வண்டுவனப்பிள்ளையைக் கணக்கிலாத்திருக் கோலம்
உண்டோமலேமருந்தைவினை ஒழித்தோம்அனு கூலம்
வேதாத்ரீசன்பாதந்தேடி வியந்தர்ச்சிக்கு மிடிகள்
வாதவூரர்க்கிங்கிடங்காட்டவும் வைத்தார்சே வடிகள்
சேரராஜனேசோழராஜனே தென்பாண்டியன் றானே
பேரம்பலத்தம்பிரானே பெருமைசேர்கர்ன்னன் றானே
கோபதிவீராசாமிசெட்டி கோமான்என வந்து
ஸ்தாபித்தார்சிவபுண்யம் செம்பொன்சகஸ்திரலட்சம் தந்து

விருத்தம்.

அழகியஸ்தலத்தின்மான்மிய மறிந்துவேதாத்ரிதன்னை
முழுதுமேவலமாய்வந்து மூவர்கோயிலினின்றேத்தி
கழுகுகளுருத்ரகோடி கௌசிகாக்ஷியையுங்கண்டு
உழலூர்மாநகரில்தங்கி ஓங்கும்பாலாறுகண்டோம்.

ஆனந்தகளிப்பு.

அன்பரே வாரீரிப்போது ஸ்தல
யாத்திரைசெய்வதால் அனுகாதுதீது (அன்)

பாலகனாய்உபமன்யமுனி-பாலுண்ணவந்திங்குப்பரவும்பாலாறு
சீலமாயிங்குதிழ்கி அன்பாற்-சிவபூசைசெய்ததால்சித்திக்கும்பேறு

தேவர்கள்திரிபுரஞ் செயிக்கச்சேர்ந்து (அன்)
திருத்தேராகவுமீசன் ரதத்தினைப்புகழ்ந்து
யாவருங்காணாத பாதம்-ஊன்ற
அச்சிறுப்பாக்கத்தில்அர்ச்சித்தோமகிழ்ந்து (அன்)

வளம்பொருந்தியபெரும்-பேறைதங்கி
வாழ்த்தப்பெற்றோம் திருவக்கரைக்ஷேத்திரம்
இளமைமேவியசந்த்ரன் வக்ராசூரன்
இறையைஅர்ச்சித்தனரிதுவக்ரதீர்த்தம் (அன்)

அரசிலியிதுவாமதேவ ரிஷி
அர்ச்சித்ததெனக்கேட்டு அஞ்சலிசெய்து
பரவினோமிரும்பை மாகாளம்-பூஜை
புரிந்துசெய்தோம்நல்ல பனிமலர்கொய்து (அன்)

விருத்தம்.

மேதாரம்பலகடந்து உபமன்யுமுனிநிமித்தம் வெள்ளம்பாய்ந்து
ஆதாரமாய்த்தொண்டை நாட்டுக்குவளந்தரும்பா லாறுதாண்டிக்
கேதாரம்போன்றபல பதிவணங்கிநல்லருண கிரியைக்கண்டு
பாதாரவிந்தத்தில் பணிகின்றோம் திருவெண்ணீ றணிகின்றோமே.

இராகம்-புன்னாகவராளி-அடதாளம்

கண்ணிகள்.

அண்ணலார்ஜோதிவடிவாய் அடிமுடியாருங்காண்பதற்
கரிதாய்வளர்ந்து பெரிதாய்
புண்ணியவல்லாளராஜன் புத்ரனாய்உத்தரக்கிரியை
புரிந்தேகிருபை சொரிந்தே
நின்றதோரண்ணாமலையை இன்றுவலம்வந்துநிலை
நின்றனம் துதிசெய்கின்றனம்
அன்றுதிருக்கண்புதைத்த அன்னையார்பாவம்தவத்தால்
அற்றதேமகிமை பெற்றதே

உமயவல்லிதீர்த்தமுதல் உம்பரும்புகழ்தீர்த்தங்கள்
ஓங்குதேவினைகள் நீங்குதே
அமைவுடன்புழுகுபூனை அஸ்வம்வலம்வந்துதேவ
ராச்சுதேஜென்மம் போச்சுதே
விருப்பமாயம்மானை திரு வெம்பாவைநல்வாதவூரர்
விரித்தா ரீசன் தரித்தார்
திருப்புகழாதிப்ரபந்தம் செய்தஅருணகிரியார்
க்ஷேத்திரம் உலக நேத்திரம்
காமதேனுபூஜைசெய்த ஆமாத்தூர்காண அற்றது
காமமே யினி க்ஷேமமே
நேமமாய்ப்பசுக்களுக்குத் தாயகமானஸ்தலமாய்
நிகழும் ஞாலம் புகழும்
தேவருலகத்திலுள்ள யாவரும்தொழுமயிலம்
சேர்ந்தோம் அன்பு கூர்ந்தோம்
மூவுலகத்தவர்காண மேவும்பர்வதம்ஆலயம்
முற்றுமே பார்க்கப் பெற்றோமே
வித்யாதரர்பூஜித்த புறவார்புனங்காட்டினை
மேவித் தொழுதோம் தாவி
முத்திதந்திடும்முண்டீச் சரத்திலிந்திரன்பூஜை
முடித்தார் வேதம் படித்தார்
ஓதும்வியாக்ரபாதர்போற்றும் பாதிரிப்புலியூர்சேர்ந்
துற்றனம் அருள் பெற்றனம்
ஈதுமுயலால்பூஜித்து அப்பனைக்கனையேற்றின
தென்பரே ஈரனும் அன்பரே

விருத்தம்.

கார்த்திகையில்ஜோதியாய்க் காக்ஷியளித்திடும்யாருங்காணுவெந்தை
கீர்த்திமூவுலகெங்குங் கிளர்ந்துவிளங்கும்அருண கிரியுமற்று
மூர்த்தியுடன்தலஞ்சேவித்துத் திருமாணிக்குழிவந்துமூவர்பாடல்
ஆர்த்தியொடுபாடினோம் ஆடினோந்தீவினையை ஜாடினோமே.

இராகம்-முகாரி-தாளம்-ரூபகம்

கண்ணிகள்.

மாணிக்கந்தனைவைத்து மாதவன்பூஜித்த
மாணிக்குழிசேர் பெண்ணைமாநதியே

தாணுவைஉக்ரவீரியர் பைரவர்மலர் தூவித்
தாழ்ந்தவடுகூர் பெண்ணைமாநதியே
நாரதமுனியருள் நந்திசிவாசாரியர்
நாடுந்துறையூர் பெண்ணைமாநதியே
ஆரூரர்மணந்தடுத் தாட்கொண்டவெண்ணெய்நல்லூர்
அருட்டுறைசேர் பெண்ணைமாநதியே
பரஞ்சோதிமெய்கண்டார்நாற் பத்தொன்பதின்மர்களும்
பரவநின்றதும் பெண்ணைமாநதியே
புரமிடையாறுசுகப் பிர்ம்மரிஷிபூஜை
புரியப்பெற்றதும் பெண்ணைமாநதியே
ஈதறையணிநல்லூர் ப்ரசண்டரிஷிபூஜை
யியற்றஹேதுவும் பெண்ணைமாநதியே
வேதம்நிறைந்ததிருக் கோவலூர்வீரட்டானம்
விரும்பிவாழ்வதும் பெண்ணைமாநதியே
படையெடுத்தஅந்தகா சூரனைவென்றகால
பைரவர்துதி பெண்ணைமாநதியே
விடையவன்வேடம்வேண்டும் மெய்ப்பொருளார்தோன்ற
மேன்மைபெற்றதும் பெண்ணைமாநதியே
நீலமலர்க்கண்ணம்மை செல்வெண்ணெய்சேர்ந்துநாம்
நீராடினதும் பெண்ணைமாநதியே
சாலஜனகர்ஜனந்தராதி யர்ச்சித்தவித்
தலத்தாலும்புகழ் பெண்ணைமாநதியே

விருத்தம்.

வேண்டியதெலாமளிக்கும்பெண்ணைமா
நதிவெள்ளம்விரும்பிமூழ்கி
மாண்டகுழியெனுமாணிக்குழி துறையூர்
வெண்ணைநல்லூர்வடுகூர்போற்றி
ஆண்டகைமெய்கண்டசிவாசாரியர் அரு
ணந்திமலரணிந்துவெண்ணை
தாண்டிவிருத்தாசலவன்னிஸ்தலம்பணிந்தோம்
தீவினைகள்தணிந்தோமன்றே.

இராகம்-கண்டா-அடதாளம்

கண்ணிகள்.

முறையாய்விருத்தாசலத்தில்மணி முத்தாநதியிற்கூடி
மூழ்கிச்சிவபூஜைசெய்தோம் மோக்ஷார்த்தத்தைநாடி

சதுர்முகன்மால்அஷ்டவசுக்கள் சாம்பவிஅகஸ்தியரும்
சார்ந்துபூஜித்தேஅருள்பெற்றனர் தமிழில்வல்லசுந்தரரும்

அடைந்தபன்னீராயிரம்பொன்னை அங்தோஆற்றிலிளைத்து
ஆரூர்குளத்திற்பரவையார்க்கு அளித்தனர்மாத்துரைத்து

நல்லநம்பிஆரூரரும் நரசிங்கமுனையாரும்
நாடிஅவதாரஞ்செய்த நாவலூரைப்பாரும்

அன்றுமுப்புரம்நகைத்தெரித்த அதிகைவீரட்டானம்
அயன்கருடன்பாண்டவர்கள் ஆற்றினர்பூஜைதியானம்

சூலகங்கைகெடிலநதிசுரர் மகிழ்சக்ரதீர்த்தம்
சூலநோயைத்தொலைத்தனரிங்குத் துதிசேர்வாகீசமூர்த்தம்

அழகியதம்பிரான்கண்டஸ்தலம் அச்சோபுரம்என்னும்
அரியதியாகவல்லியீது அகஸ்தியர்தம்மால்மின்னும்

மகிமையுற்றதிருத்தினைநகர் மணிமுத்தாநதிகெடிலம்
மறைமுனிவர்பூஜித்தஸ்தலம் வலம்வந்தொழித்தோம்குடிலம்

இலங்கும்நாகராஜன்பூஜித்த எருக்கத்தம்புலியூரில்
இசையினில்வல்லயாழ்ப்பாணற்கு இணையுண்டோவிந்தபாரில்

கூறும்வான்மீகர்அர்ச்சனைசெய்த கூடலையாற்றூர்கூட்டி
கோலசுந்தரமூர்த்திபதிகம் கொண்டாரீசன்வழிகாட்டி

கலிக்கம்பர்வந்தபெண்ணாடகமென் னுங்கருதுந்தூங்கானைமாடம்
காமதேனுவிந்த்ரன்யானைசப்த கன்னிகைபூஜைவிசேடம்

திருஅரத்துறைசம்பந்தர்க்குமுத்துச் சிவிகைசின்னமுங்குடையும்
சித்தித்ததல்லாமல்சப்தரிஷியிந்த்ரன் செய்தார்பூஜைபணிவிடையும்

விருத்தம்.

அங்கயற்கண் ணம்மையார் பாகன்செய்த
அறுபத்து நால்விளையா டனைத்துங்கேட்டுச்
சங்கநிதிப் பதுமநிதிச் செல்வமோங்கித்
தலங்களெலாந் தொழுதுவிழாப் பொலிவுகண்டு

மங்கலமாய் மஹேஸ்வர பூஜைகணடத்தி
மன்னுசென்னை மாநகர்வாழ் நேத்தப்பாக்கம்
எங்கள்முனி சாமிவேள்மயிலைதன்னி
லீந்ததனங் கொண்டுகரு வூர்வந்தோமே.

இ-ம். அசாவேரி-தாளம்-ரூபகம்.

பல்லவி.

கருவூர்க்ஷேத்திரத்தின் எல்லை-கண்டபின்பர கதியன்றிக்கருவூரில்லை

அநுபல்லவி.

அருமையாகியபல அற்புதங்கள்புரிந்த
அந்தக்கருவூர்த்தேவர் அவதாரஞ்செய்தவிந்த (கரு)

சரணங்கள்.

க. தேவர்கள்அயன்சுக்ரன் முசுகுந்தன்கோபிதாரன்
திக்குப்பாலகர்முதல் செய்தார்அர்ச்சனைமுன்னம்
பாவிவேடன்விபண்டன் பக்தன்போலும்களவைப்
பற்றிவந்தவன்மாண்டும் முத்திதந்ததுஎன்னும் (கரு)

உ. அயன்அயர்ந்துநித்திரை செய்யவுங்காமதேனு
அர்ச்சித்துலகசிருஷ்டி பெற்றதல்லும்பகலும்
நியமமாகஅதனல் கற்பபுரியென்று
நிகழும்வஞ்சுளாரண்ய க்ஷேத்திரமென்றுபுகலும் (கரு)

ரு. சிவகாமியாண்டார்தம் திருப்பூங்கூடையைச்
சிதைத்ததுப்புகழ்ச்சோழ ராஜன்யானைநேர்ந்து
தவமிகும்எறிபத்தர் யானையொடுபாகனைத்
தறித்துகொன்றிடவீசன் எழுப்பினர்கிருபைகூர்ந்து (சரு)

ச. அரியதீவினைதீர்க்கும் ஆம்பிராவதிநதி
அற்புததாடகை பிரம்மதீர்த்தம்படிந்து
உரியசிவார்ச்சனை புரிந்துபசுபதீஸர்
உமைசஹிதர்தொழுது இமையில்வினைகடிந்து (சரு)

விருத்தம்.

அடியாரென்றறியாமல் தலைக்குத்தீதங்
காற்றினதாய்ப்பயங்கொண்ட புகழ்ச்சோழன்றன்
முடியிலேஅத்தலையைத் தாங்கித்தீயில்
மூழ்கியவர்முக்திபெற்ற கருவூர்விட்டுக்

கொடிதானகோடையிலும் வெப்பந்தன்னைக்
கொடாதுசதாகுளிர்ச்சியையே கொடுத்துநிற்கும்
வடிவுடையவெண்ணெய்மலை தன்னில்சைவ
மடங்கட்டிமகிழ்பெற்றோம் புகழ்பெற்றோமே.

இராகம்-பைரவி-தாளம்-ஆதி

பல்லவி.

கண்ணப்பர்போலன்பால் அண்ணலாரைப்பணிந்துகதிபெறலாம்வாரீர்

அநுபல்லவி.

புண்யஸ்தலம்அனந்தம் பொருந்தும்கொங்குநாடீது
பூர்வம்புரிந்ததவப் பொலிவால்வந்தோமிப்போது (கண்)

சரணங்கள்.

குன்றுதோறுடல்களில் ஒன்றாய்முருகப்பிரான்
கொண்டவெண்ணெய்மலையைக்கண்டோம் காமதேனு
அன்றுகற்பபுரியில் சிருஷ்டித்தஉயிர்கட்கு
அமைத்ததுவெண்ணெயிப்போ தஸ்தமாயினபானு (கண்)

வெஞ்சனென்னுமசுரன் விரும்பினவரம்பெற்ற
வெஞ்சமாக்கூடலிதுமேலாம் கௌதமர்பால்
அஞ்சாதிந்த்ரன்சேவலாய்க் கூவிஅகலிகையை
அணைந்தமஹாதோஷம் அர்ச்சித்தகற்றினதால் (கண்)

திருப்பாண்டிக்கொடுமுடி க்ஷேத்ரம்நொய்யநதி
திகழுங்காவிரிநதி சங்கமதீர்த்தம்ஆடி
உருக்கமாய்கணபதி உலகளந்தவரயன்
உவப்பால்அர்ச்சனைசெய்து ஓங்கும்சந்நிதிதேடி (கண்)

விருத்தம்.

கோலமாம்ஸ்ரீகைலாயக் கொடுமுடிகளிலேஒன்றாய்ச்
சாலவும்ஒளிசேர்பாண்டிக் கொடுமுடிஸ்தலம்சேவித்தோம்
வேலவன்றலங்கள்தன்னில் விசேஷமாய்விளங்குகின்ற
மேலுளதிருச்செங்கோடு மேவுவோம்தாவுவோமே.

ஆரபிராகம்-ஆதிதாளம்-கண்ணிகள்.

பிரியாதிருக்கதேவி அர்த்தநரீஸ்வரம்
பெற்றதிருச்செங்குன்றூர்வந்து சேர்ந்தோம்

அரிதீர்த்தம்பிரம்மதீர்த்தம் முருகதீர்த்தமும்பதி
றுறுதீர்த்தம்ஆடினேம் பக்தர்களே
வானேரும்ரிஷிகளும் பூஜித்துக்கருதிய
வரங்கள்பெற்றார்சிங்க வன்மராஜன்
ஏனந்தன்னைவேட்டையில் எய்திடப்பிருகுரிஷி
யிட்டசாபம்நீங்கின பக்தர்களே
இடர்செய்யும்களிர்ச்சுர மியற்கையாகவிங்காட்டி
லிருந்துஞானசம்பந்தர் கூட்டந்தன்னைத்
தொடர்ந்திடத்திருநீல கண்டத்தின்மீதாணை
சொல்லிச்சுரம்ஓட்டினார் பக்தர்களே
விஸ்வாமித்ரர்பூஜித்துப் பிரம்மரிஷியான
வேதாம்பிகைபவானிகூடல்வந்து
அஸ்வதானமீந்து பவானிகாவிரியாடி
அமூர்தசரசுங்கண்டோம் பக்தர்களே
காயத்திரிசாவித்திரி சூர்யதீர்த்தம்முதலாய்
கணக்கில்லாத்தீர்த்தம்பார்த்தோ மிலந்தைவிருக்ஷம்
தூயகனியால்தந்த வர்த்தனசோழராஜன்
சுபுத்ரப்பேறடைந்தனர் பக்தர்களே
தனதன்பராசரிஷி மாலுதானரிஷிஅர்ச்சனைசெய்தனர்தருமை
சன்மன்றன்னைச்
சினந்துகல்லாகும்படி செய்தஅம்முனிசாபந்
தீர்த்தருளினஸ்தலம் பக்தர்களே
மருவும்பிங்கலையென்னும் வேசிதினம்நூறுபொன்
வாங்கவும்வணிகன்பொன் கிட்டாமல்
வருபிறப்பினில்அவள் மனையாளாககாயத்திரி
மடுவில்வணிகன்வீழ்ந்தான் பக்தர்களே
அதனையுணர்ந்தமாது மறுமையில்தான்தங்கையாய்விட
அம்மடுவில் வீழ்ந்திறப்ப
மதம்போல்நல்கும்மடுவு மாடப்புறுவாக்கி
வழங்கினசிவலோகம் பக்தர்களே

விருத்தம்.

பவானியின்மகிமையாவும் பார்த்துளமகிழ்ந்துபின்னும்
அவாவுடனங்குதங்கி யடுத்தநாள்தன்னில்வந்த

உவாத்தினர் தீர்த்தமெல்லா மொன்றுந்தப்பாமல்மூழ்கிச்
சிவாகமப்ரசங்கஞ்செய்து சென்னிமாமலைக்குவந்தோம்.

இராகம்-சாவேரி-சாபுதாளம்

கண்ணிகள்.

அகஸ்தியமகாரிஷி அர்ச்சிக்கஞானோப தேசம் செய்
தருளிய அறுமுகக் கடவுள்சென்னிமலை பிரகாசம்
சிவமலைவலம்வந்தோம் வேலவன்சிவலிங்க மாகி-வாழ்வர்
சிவபெருமானுக்கு உபதேசகுரு வாகி
முருகப்பிரான்பூஜை புரிந்தமுருகன்பூண்டி க்ஷேத்ரம்- தங்கும்
முருகதீர்த்தம் மாமகதீர்த்தம் அருள்செய் நேத்ரம்
மாதவிவனமிது மாலாதரனென்னும் வேடன் ஒரு
மாலையாலருள்பெற்ற மகிமைசொல்லவல்லவன் சேடன்
மாமகம்பன்னிரு வருஷத்துக்கொருதரம் பொங்கும் வேட
வடிவாய்சுந் தரர்பொன்னைக் கொள்ளையிட்டபூதந் தங்கும்
புகழ்மிகுந்ததிருப் புக்கொளியூரவி நாசி சேர்ந்து
போற்றப்பெற்றோமிது பொற்புறுதக்ஷண காசி
அர்ச்சித்தனர் அகஸ்தியர் அம்மைஅயன்தேவ ரம்பை யிணை
யாமோஅகஸ்திய தீர்த்தத்திற்குக்கச்சிக் கம்பை
ஆரூரர்முதலைவாய்ப் பிள்ளையழைத்தவர் அன்னை தந்தை
யார்மகிழஉப நயனமுடித்தனர் முன்னை
பேரூரென்கின்ற மேலைச்சிதம்பரம் பந்தம் அரசு
பிறவாப்புளியிற வாப்பனைமேன்மைய னந்தம்
அர்ச்சித்தனர்அயன் காமதேனுமுசு குந்தன் கௌரி
யம்மைவிஸ்வாமித்ரர் இயமன்நாரதர்வியாச ரிந்த்ரன்
செவ்வேள்வாழ்கின்ற மருதமலைமருத தீர்த்தம் அனும
தீர்த்தம்சரவணப்பொய்கை ஸ்கந்தகன்னி தீர்த்தம்
விரும்பிமூழ்கிவந்தோம் வெள்ளிமலையிந்த வேளை யிங்கு
விண்ணோர்கள்பூஜிக்கும் ஓசைகேட்டுச்செல்வோம் நாளை

விருத்தம்.

சிவபிரான்சதானந்தநிருத்தஞ்செய்யும்
தெய்வீகவெள்ளிமலைதனிலேதங்கிப்
பவமகற்றுங்காஞ்சிமாநதியிலாடிப்
பஞ்சலிங்கமெனும்ப்ருதிவியப்புத்தேயு

நவமானவாயுவார்காயலிங்கம்
நற்பஞ்சபூதங்கள்குணமுங்கண்டு
புவனமிகுபுகழ்கொங்குநாட்டைவிட்டுப்
பொன்மிகுந்தமலைநாடுபோற்றலானோம்.

இராகம்-சஹானா-ரூபகதாளம்
பல்லவி.

சஞ்சலம்இனியேது மலைநாடு சார்ந்ததால் வாராது

அநுபல்லவி.

அஞ்சைக்களத்தைத்தேடி அலைவாய்தீர்த்தத்திலாடி
ஆற்றினோம்பூசனை போற்றினோமீசனை (சஞ்சலம்)

சரணங்கள்.

ஆண்டவன்றனைத்தானுக் கனுப்பும்ஆரூரர்வெள்
ளானையூர்ந்துகைலை யடையஅருளினதால் (சஞ்ச)
கொடுமையாய்த்தாயாரைக் கொன்றபரசிராமன்
கோலமாய்மலர்தூவிக் கொலைப்பழிதொலைத்ததால் (சஞ்ச)
சிவபூசையினடனச் சிலம்போசைதனைக்கேட்டச்
சேரமானும்அஸ்வமும் ஸ்ரீகயிலைசேர்ந்ததால் (சஞ்ச)
தாணுமாலயப்பெரு மாள்சுவிந்திரம்அயன்
சார்ந்துசாபம்போய்கோயில் தந்தருளப்பெற்றதால் (சஞ்)
கடல்தனிலேபரசி ராமன்இடத்தைப்பெற்றுக்
கன்னியாகுமரியில் கௌரியைப்பூஜித்ததால் (சஞ்ச)
கல்யாணத்துக்குக்கௌரி சேர்த்தபண்டங்கல்லாகிக்
கன்னியாகுமரியா யெந்நாளுமிருப்பதால் (சஞ்ச)

விருத்தம்.

அலைவாய்தீர்த்தம்ஆழ்ந்துமலைநாட்டுஸ்தலம்வாழ்ந்தங்கண்ணலாரை
தலையாரக்கும்பிட்டுக் கலையார்ந்தசேரமான்சரிதந்தேர்ந்து
நிலையாரப்பிரமனூர்கோயில்கொண்டு நிகழ்கின்றநீர்மைகண்டு
சிலையார்ந்ததென்மதுரைசேர்ந்துவினைதீர்ந்துகளிகூர்ந்தோமாதோ.

கண்ணிகள்-அடதாளம்.

என்னபுண்ணியமோ முன்னம்யாம்செய்ததனால்
இந்நாளிறைஞ்சப்பெற்றோம் திருவாலவாய்

சொர்ன்னதாமரைவையையெழுகடலும் மின்னம்
தோற்றுதனந்ததீர்த்தம் திருவாலவாய்
எத்திசைதன்னிலும் இணையற்றத்வாதசாந்தம்
என்றேயீசன்மகிழுந் திருவாலவாய்
அத்தன்கடம்பவனந் தன்னை-மதுரைநகர்
ஆக்கியருள்புரிந்த திருவாலவாய்
வெள்ளியம்பலத்தினில் நடனம்பதஞ்சலியும்
வ்யாக்ரபாதருங்கண்ட திருவாலவாய்
உள்ளமகிழவந்த பாண்டியன்மகளாக
உமையவளேயுதித்த திருவாலவாய்
அம்மையார்பொருட்டாக அக்குண்டோதரனுக்கு
அன்னமிட்டருளிய திருவாலவாய்
வெம்மைதீரப்பின்னும் அன்னக்குழிவையையும்
விடையோனழைத்தளித்த திருவாலவாய்
கவின்சேர்காஞ்சனமாலை நீராடுதற்குஎழு
கடலுமழைத்தளித்த திருவாலவாய்
தவமிகுந்தபிராட்டி யிடம்உக்ரகுமாரனைத்
தந்தருளியதிந்தத் திருவாலவாய்
வேலும்வளையும்செண்டும் கொடுத்துமிக்கடல்வற்ற
வேல்விடுத்ததுமிந்தத் திருவாலவாய்
மேலாகியவீசன் மாணிக்கம்நல்வளையல்
விறகுகுதிரைவிற்ற திருவாலவாய்
நகரம்அழிக்கவந்த யானைநாகத்தையெய்து
நான்மாடக்கூடலான திருவாலவாய்
பகரும்இந்நகர்எல்லை ப்ரளயத்தில்மறைந்திடப்
பாம்பால்காட்டப்பெற்ற திருவாலவாய்
இத்தகையறுபத்து நால்விளையாடல்கள்
ஈசன்செய்தருளிய திருவாலவாய்
முத்திபெற்றனர்நெடு மாறர்மானியாரும்
மூர்த்திகுலச்சிறைசேர் திருவாலவாய்

விருத்தம்.

அத்தனும்அம்மைவேளும் அரசாண்டமதுரைதன்னில்
இத்தகைமகிமைகண்டும் இணையிலாதழகுவாய்ந்த
சித்திரைமகிழுமாடி சிங்கநல்மாசிவீதி
பத்தியாய்ப்பணிந்துபின்னர் பரங்குன்றம்பரவலானோம்.

இ-ம்-ஆனந்தபைரவி-ரூபகதாளம்

பல்லவி.

பொடியாடிப்பொற்பதம் போற்றினோம்-இந்தப்
புண்யஸ்தலமகிமை சாற்றினோம்

அநுபல்லவி.

வடிவேலாயுதன்தெய்வயானையை ஆவலோடு
மணஞ்செய்தபரங்குன்றம் வாழுமாவுடையோடு (பொடி)

சரணங்கள்.

க. சிபிராஜன்பூதானஞ் செய்யவேதியராய்ச்
சிவபெருமான்தானம் ஏற்றருளினார்தேடித்
தவமிகுமரிச்சந்த்ரன் பூசித்துப்புகழ்பெற்ற
தலம்வந்துசரவணத் தீர்த்தந்தன்னிலுமாடி (பொடி)

உ. வையையாற்றிற்சம்பந்த ரிட்டவேடெதிரேற
வழங்குமேடகம் நெடுமாறர்பூசித்தல்கண்டு
பையவந்தோங்கொடுங் குன்றமிந்த்ராதிகள்
பரிந்துஅர்ச்சித்தசெய்தி தெரிந்துமகிழ்ச்சிகொண்டு (பொடி)

ந. அம்பிகைதேவேந்த்ரன் தேவகன்னிகைபூஜை
ஆற்றினதிருப்புத்தூர் அமரர்களும்வணங்கும்
நம்பன்பாண்டியனுக்கு ஆப்பிகின்றுங்காக்ஷி
நல்கினஆப்பனூர் நந்திதேவர்வணங்கும் (பொடி)

விருத்தம்.

மலைமிகுந்தவடநாட்டில் தொண்டைநாட்டில்
மஹாபுண்யஸ்தலமிகுந்த சோழநாட்டில்
நிலையாகநிஜலத்தைக் குழையாற்றந்து
நீளுலகிற்சுகஞ்செய்யுங் கண்டிராஷ்டர்

கலையாருஞ்சென்னைவாழ் நேத்தப்பாக்கங்
கண்யவான்முனிசாமிச் செம்மல்வெண்ணெய்
மலையிற்செய்யுதவியினுலு யர்திருப்பூ
வணம்வங்தோம் வாதவூர்த்தலம்வங்தோமே.

இராம்-அபுரூபகதாளம் ஜம்பை.

போற்றினேம்பூவணத்தைப் பொன்னனைக்குரசவாதம்
ஆற்றலுடனரனுர்செய் தளித்தனரேயங்நாள்
ஆற்றினள்பொன்னு லுருவ வ்வழகையள்ளிமுத்தமிட்டு
ஏத்தினவாறச்சோ என்னழகியபிரானே

வாதவூர் இதுஸ்ரீமங் மாணிக்கவாசகர்தான்
பூதலத்தில்சைவமதம் போற்றவுதித்தனரே
பூதலத்தையாள்வதற்குப் பொன்பதுமைராஜனுய்
காதலுடன்வரச்செய்த கானப்பேர்கண்டோம்

இதுகாலம்ஆடானை ரத்னதீர்த்தமாடிப்
பதுமமலரால்பூஜை பரிவுடனேசெய்தோம்
பதுமமலரணியும்பழம் பதிநாதர்புனவாயில்
சதுர்வேதம்பூஜித்துச் சார்ந்ததநுக்ரஹமே

விருத்தம்.

ஆலவாயரன்மீனுக்ஷி யாலயம்ஸ்தூபியாவும்
சாலபொன்னுலிழைத்த தனமிகுநாட்டுக்கோட்டை
சீலர்களுதவிசெய்த செம்பொன்னுல்சேதுதன்னில்
மேலறுபத்துமூவர் விழைமடாலயம்அமைத்தோம்.

இ-ம்-புன்னுகவராளி-அட்டதாளம்

கண்ணிகள்.

எண்ணிலாதமகிமைவாய்ந்த இராமேஸ்வரம் ஈது
ஏதோஇத்தலம்யாம் வணங்கவிசைந்தேயிப் போது
அழகியராமர் லக்ஷ்மணர்லக்ஷ்மி அகஸ்தியமா முனியும்
அஸ்வத்தாமர்அநுமராதி அர்ச்சித்தார்காசிப முனியும்
இலங்கும்சங்கரபாண்டியராஜன் எழில்அக்நிசரஸ் வதியாம்
இன்னமுமனந்த பக்தர்க்கருளின ராமநாதர் பதியாம்
ஸ்தலபுராணம்படித்துமஹா சங்கல்பஞ்சொல்லி ஸ்நானம்
சகலருஞ்செய்து அந்தணர்களுக்குத் தந்தோமனந்த தானம்

அரியதீவினையாவுமொழித்தோம் அலையிலாதனுஷ் கோடி
அமுதஅகஸ்தியதீர்த்தமுதலாய் அலகிலாதீர்த்தங்க ளாடி
பர்வதவர்த்தனிபாகனை அஷ்டாங்கபாவனையோடு பணிந்து
பாங்காய்ப்பிரகாரம்எல்லாம்வலம்வந்து ப்ரபர்தம்சொன்னோம்வினை தணிந்து
உயர்சிவகங்கைதீர்த்தந்தங்கிப உத்தரகோச மங்கை
உவந்துபூசித்தார்ப்ருகுஷியாதி ஒளிஅக்னிதேவன் கங்கை
அமரர்சதாநந்தரிஷியும் அசுராதியும் வாழ்ந்து
அர்ச்சித்தசுழியல்மேனி நாதரை அஞ்சலிசெய்தோம் தாழ்ந்து

விருத்தம்.

திங்களணிபூவணலிங்கேசர்தேவி
செண்பகவல்லித்தாயார்விரும்பிவாழும்
மங்கைபுரந்தனிலேவில்வலன்வாதாபி
வஞ்சிக்கஅவர்கள்தமைவதைத்ததாலே
எங்கள்அகஸ்தியரடைந்ததோஷநீங்க
இத்தலத்தில்பூசித்தாரெனப்புகழ்ந்து
கங்கைகொண்டான்ஸ்லதம்பணிந்துதிருநெல்வேலி
கண்ணுதலைத்தொழுது துதிபண்ணுவோமே.

இராகம்-காம்போதி-தாளம்-ரூபகம்

கண்ணிகள்.

க. வெள்ளத்தில்நெல்போகாமல் வேதசர்மாநிமித்தம்
வேலிகட்டிக்காத்ததும் நெல்வேலியே
உள்ளபடியுலகில் ஓங்கியதாம்ப்ரவர்ணி
ஓடியெங்கும்பாய்வதும் நெல்வேலியே

உ. சிந்துபூந்துறைதீர்த்தம் கருமாறிதீர்த்தமும்
சிறந்திலங்கவாய்த்ததும் நெல்வேலியே
இந்தப்பொற்றாமரைத்தீர்த்தம் துர்க்காதீர்த்தம்
இசைந்திருப்பதும்திரு நெல்வேலியே

ந. பலகாலுந்தடுக்கியாயனை வேய்வனத்தில்
பால்கவிழ்க்கச்செய்ததும் நெல்வேலியே
உலவும்ஆயன்வெட்டிய கோடாரியின்வடுவை
உமைபாகன்தாங்கியதும் நெல்வேலியே

௪. நாரதமுனிகுலசேகரபாண்டியன்
நாகங்கள்பூசித்ததும் நெல்வேலியே
சீராருமகஸ்தியர் ஸ்வேதமுனிவர்ப்ரம்மா
சீதரன அர்ச்சித்ததும் நெல்வேலியே

[illegible]பாண்டியராஜன் வேண்டிவளர்ந்துங்
[illegible]பும்பின்றீசன் நெல்வேலியே
[illegible]த்துராமர் பாசுபதமுங்கிருஷ்ணன்
தனயன்பேறுபெற்றதும் நெல்வேலியே

௬. பொற்றாமரையில்பெண்கள் கரையேறவருந்திய
போது ஆடையைத்தந்த நெல்வேலியே
விற்பன்னனாகவேதம் பிள்ளைகளுக்கோதியே
வேதியனை ரக்ஷித்த நெல்வேலியே

௭. காமுகனுய்ப்பாடுவான் பிள்ளைகளவுசெய்துங்
கடுஞ்சிறைவிடுவித்த நெல்வேலியே
காமவெறியினலேகள் குடித்ததோஷத்தைக்
களைந்தபொற்றாமரைசேர் நெல்வேலியே

௮. காலசந்திபூஜையாலீசன் கேளாதிருக்கக்
கருவூர்தேவர்கோபித்த நெல்வேலியே
மூலநாள் ஆவணியில் மானூர்தனில்நடன
முன்னவனுடுந்திரு நெல்வேலியே

௯. என்றுந்தாம்ப்ரசபையில் தேவிக்காகநடனம்
ஈசன்காட்டியருளும் நெல்வேலியே
நின்றசீர்நெடுமாறர் அன்றவதாரஞ்செய்து
நிகழ்த்தப்பெற்றதுந்திரு நெல்வேலியே

௰. பொற்றாமரையில்சப்த ரிஷிகள்வெறுத்துச்செல்லப்
போதித்தழைத்தருளும் நெல்வேலியே
அத்தன் அனந்தமான திருவிளையாடல்கள்
ஆடப்பெற்றதுமிந்த நெல்வெலியே

விருத்தம்.

செய்யசிவபூஜைஅனைவோருஞ்செய்து
சிவபுண்யமேபுரியுந்திருநெல்வெலிச்
சைவரெலாந்திருத்தொண்டர்புராணம்வைத்துத்
தத்தமில்லங்களிலர்ச்சித்தல்கேட்டு

அய்யனாறுமுகக்கடவுள் திருச்செந்தூரை
அணைந்துகும்பாபிஷேகத்தைப்பார்த்துப்
பையவேஸ்தலபுராணம்படித்துப்
பணிகின்றோஞ்சந்தனத்தை யணிகின்றோமே,

இராகம்-அசாவேரி-ஆதிதாளம்

கண்ணிகள்.

சந்தனசைலம்சீரலைவாயெனவும் மிகமகிழ்ந்து
சகலலோகமும்புகழுஞ் செந்தூரே
இந்த்ரன்பிரம்மா யமதர்மராஜன் மற்றுமுள்ள
இமையோர்முனிவர் இறைஞ்சும் செந்தூரே
சீரலைவாய்வத னரம்பம்மாதுர் பிதுரகஸ்திய
தேவதீர்த்தமுந்திகழுஞ் செந்தூரே
சூரபத்மாசுரன்சிங்கமுகன்தாருகன் பானுகோபன்
தொலைத்தவேலவன்வாழுஞ் செந்தூரே
விண்ணோரைமீட்ட விரவாகுதேவர் விரகேசரி
வீரமஹேந்திரன்வாழுஞ் செந்தூரே
நண்ணும்விர தீரனேடுநவவீரரும் பூதவீரரும்
நற்படைவீடுகொண்டருளுஞ் செந்தூரே
வள்ளிநாயகிவடிவேலன்றன்னை மணமுறயின்டடி
மணம்புரிந்துவாழுஞ் செந்தூரே
உள்ளபடியேபவரோகமுதலாய்ச் சகலரோகமும்
ஒழித்துச்சுகத்தையளிக்குஞ் செந்தூரே

விருத்தம்.

செந்தூரைப்பிரிந்துகுல சேகரன்பட்டிணஞ்சேர்ந்து சிவனைவாழ்த்தி
அந்தத்தில்சூரபத்மன் மாமரமாய்நின்றதத் தாக்ஷியாகச்
சந்ததமும்அரும்புமலர் காய்கனிகள்சார்ந்தமா மரத்தைக்கண்டே
அந்தரத்தோர்புகழ்விஜய நகர்பார்த்துக்குற்றாலம் அணுகினோமே.

இராகம்-பைரவி-தாளம்-ரூபகம்

பல்லவி.

திரிகூடாசலம்சேர்ந்தோம்சிவபிரானைத்தெரிசித்துக்களிகூர்ந்தோம்

அநுபல்லவி.

அரியைச்சிவலிங்கமாய் அகஸ்தியமா முனி
அர்ச்சனைசெய்தமைத்த குற்றாலமெனுந்தனி (திரி)

சரணங்கள்.

௧. வேதசொரூபமாய் விளங்கியகுறும்பலா
விருக்ஷம்குழல்வாய்மொழி பக்ஷத்துடனேவாழும்
நாதனைவாசுகி புஷ்பகந்தர்முதலாய்
நாளுமர்ச்சனைசெய்து நீளத்தொழுதுசூழும் (திரி)

௨. வியத்ரியெனும்வேதியன் மிக்கபாதகனையு
மேவுஞ்சிவலோகத்தில் விட்டருளினமேலும்
பயத்தோடிராமல்தக்கன் வேள்வியில்விருந்துண்ட
பாவந்தனையொழிக்கத் தேவர்பூசித்ததாலும் (திரி)

சித்ராநதிவட வருவிப்பொங்குமாகடல்
செண்பகாடவிதீர்த்தம் பண்புடனேயமைந்த
சித்ரக்குளமுஞ்சிவ மதுகங்கைமுதலான
தீர்த்தங்களிலேமூழ்கித் தேவர்புகழுமிந்த (திரி)

விருத்தம்.

திரிகூடாசலம்விட்டுத் தென்காசிசித்ரநதி சேர்ந்துபூசா
கிரியைதனைமுடித்தோம் முன்குறுமுனியால் வடகாசிசெய்யக்கண்
அரியைசிவன்றேகத்தில்வைத்தசங்கரநாராயணனையாழ்ந்து[டோம்
கரிவலமாய்வந்தநல்லூர்பால் வண்ணநாதர்பதங்காண்போம் வாரீர்.

இ-ம் அபூர்வம்-தாளம்-ஜம்பை.

பாலசுந்தரதீர்த்தம் சிவகங்கைதீர்த்தம்திக்குப்
பாலகரால்பூசித்த பால்வண்ணரழகே
பால்வண்ணரிருந்தபுதர் பாண்டியனுல்யானைவலம்
சீலமுடனேசெய்து சிவகணமாயினதே
அடைவுடனேதொழுதோம்திரு வாவினன்குடிமுருகர்
படைவீடொன்றாக்கினர்மாம் பழம்பெறுததனால்
படைவேலன்மாங்கனிக்காய் பரமனிடங்கோபிக்கக்
கடியபழம்நீயென்ன கமழ்பழநியிதுவே
தேவதீர்த்தம்அமுத தீர்த்தம்சண்முகநதி
தீர்த்தம்சூரியதீர்த்தம் சேர்ந்தாடுகின்றோம்
தேவேந்திரன்பிரமன் அக்நி நித்யானந்தன்
சேரர்கோன்முதலாக சேஷனும்அர்ச்சித்தார்.

---

விருத்தம்.

வேலவன்வாழ்பழநிமலைபணிந்தபின்னர்
மீண்டுமேவையைதனில் பூசைசெய்து
ஆலவாய்ப்பதிசேர்ந்து சிலநாள்தங்கி
அறுபத்துநான்குவிளையாடல்பார்த்துக்
கோலதிருப்பெருந்துறையும் மாயோன்மேவுங்
குறுங்குடியும்கடம்பன்வாழ் வள்ளியூரும்
சாலவுநன்மலர்தூவிப்பணிகள்செய்து
தாழ்ந்துராமேசநல்லூர் சூழ்ந்தோமாதோ.

இராகம்-அடாணு-ஆதிதாளம்

கண்ணிகள்.

க. சாற்றுஞ்சடாயுதீர்த்தம் தங்கும்ராமேசநல்லூர்
சார்ந்திருப்பதுந்தாம்ப்ரவர்ணி நதியே
போற்றும்பாண்டவர்வரம் பெற்றமணவைநகர்
பொருந்தப்பெருகுந்தாம்ப்ரவர்ணி நதியே

உ. சிதம்பரத்தில்நடனம் பாண்டியராஜன்கண்ட
செப்பறைசேர்தாம்ப்ரவர்ணி நதியே
உதகம்()சித்ராநதிசேர் மருதூர்குதிரைமுகம்
ஒழித்தருளின்தாம்ப்ரவர்ணி நதியே

ஙா. முனிவருந்தேவரு முறையிட்டுவரம்பெற்ற
முறப்பநாடுசேர்தாம்ப்ரவர்ணி நதியே
கனிவுடன்கயிலையை வருவித்துக்காட்டின
கயிலைபுரஞ்சேர்தாம்ப்ரவர்ணி நதியே

ச. கருவூர்த்தேவர்க்குக்கர்த்தன் காக்ஷியளித்ததிருக்
காந்தீஸ்வரஞ்சேர்தாம்ப்ரவர்ணி நதியே
திருநவலிங்கபுரம் சேர்ந்துமூன்றைகோடி
தீர்த்தங்கள்மூழ்கும்தாம்ப்ரவர்ணி நதியே

ரு. பிர்ம்மாதக்கன்வேள்வியில் பெற்றகுற்றம்ஒழித்த
பிரமேசம்சார்ந்த தாம்ப்ரவர்ணி நதியே
துர்மதிதாரைதன்னைச்சேர்ந்த தோஷத்தைத்தீர்த்த
தொலைத்தசோமேசம்தாம்ப்ரவர்ணி நதியே

() உதகம்-உதகாதி.

௬. புனலரசன்பூசித்து வாழ்த்துஞ்சேர்ந்தமங்கலம்
பொருந்தப்பெற்றதுந்தாம்ப்ரவர்ணி நதியே
மனம்போல்பச்சைநாயகி தவத்தால்மணம்புரிந்த
மந்திரேஸ்வரஞ்சேர்தாம்ப்ரவர்ணி நதியே

௭. மறவாமல்துர்வாசர் என்றும்பூசிக்குந்துரு
வாசநல்லூர்சேர்தாம்ப்ரவர்ணி நதியே
உறுதியாகநித்யத்வம் ரோமேசரிஷிபெற்ற
உரோமேஸ்வரஞ்சேர்தாம்ப்ரவர்ணி நதியே

௮. நம்பன்சேரன்மாதேவி புடைமருதூர்கோடீசம்
நன்னகரஞ்சேர்தாம்ப்ரவர்ணி நதியே
அம்பாசமுத்திரம்பாவநாசமூலநகரம்
அனந்தஸ்தலஞ்சேர்தாம்ப்ரவர்ணி நதியே

விருத்தம்.

கற்புடையாளாகினியார்காதலோடு
கணவனைத்தாங்கிச்செல்லக் கழுவிலுற்றுக்
குற்றுயிராயிருந்தமாண்டவ்யர்சாபங்
கூறினார்விடியஅமங்கலைநீயென்ன
சற்றும்விடியாதிருக்கச்சபித்தாள்மாது
தபோதனர்தேவர்கள் பூசித்திருவர்சாபம்
அற்றதிருக்களக்காடுவிட்டோம்ஈழம்
அணைகாணும் கோணமலைக்கிணைகாணேமே.

இராகம்-உசேனி-தாளம்-ரூபகம்

கண்ணிகள்.

௧, வந்தித்தோம்திருக் கோணமாமலையைச்சாம்பசிவாவென
மஹாராஜனைமூழ்கிப்பூசித்தோம் அன்பர்களே
அந்தரத்தோர்களும் போதாயனரிஷியும் அசுரர்களும்
அர்ச்சித்துநற்பேறடைந்தனர் அன்பர்களே

௨. மாலியவானென்னும் அசுரன்பூஜைசெய்த திருக்கேதீச்சுரம்
வலஞ்செய்திறைஞ்சிவாழ்த்தினோம் அன்பர்களே
ஆலிபோன்றகுளிர் பூஞ்சோலைதீர்த்தம் பிருகுரிஷிமுதல்
அறிஞர்க்குச்சித்தியருளின தன்பர்களே

௩. கடம்பன்குன்றுதோறாடல்களிலொன்றாம் கதிர்காமம்
கந்தர்வன்சாபங்கடிந்த அன்பர்களே
தடந்தனில்யானைவணிகனைப்பிடிக்கக் கதிர்வேலோவெனச்
சாமிவேடராய்ரக்ஷித்தார் அன்பர்களே

௪. வேலன்ப்ரணவ சொரூபமாயிருந்து அனந்தமான
விளையாடல்களைச்செய்தனர் அன்பர்களே
மேலும்தேவர்கள் மேவிமலர்தூவும் இத்தலமகிமை
விரித்துரைத்திடில்பெருகும் அன்பர்களே

விருத்தம்.

கதிர்காமவேலோன்பொன்னார் கழலிணைப்பணிந்தபின்னர்
கதிதரும்ஸ்காந்தமான்மிய கதையினைக்காலக்ஷேபம்
விதியொடுவீடுதோறும் மேவும்நல்யாழ்ப்பாணத்தில்
அதிகபொன்பெற்றுதில்லை அம்பலம்அணுகலுற்றோம்.

இராகம்-சாவேரி-சாப்புதாளம்

கண்ணிகள்.

பார்புகழ்திருக்கோயில்புலியூர்முதலிய
பலநாமம்பெற்றிருக்குஞ் சிதம்பரமே
சீர்மலிபுலீச்சுரதீர்த்தம்புலிமடு
திருப்பாற்கடல் வாய்ந்த சிதம்பரமே

௨. அனந்தம்வியாக்ரபாதம் நரகேசரிபர
மானந்தக்கூபஞ்சேர் சிதம்பரமே
தினந்தினந்தேவர்கள் சூழ்குமனேகதீர்த்தம்
தில்லைவனமுஞ்சார்ந்த சிதம்பரமே

௩. வத்ரியந்த்ரமுனிவர் புத்ரர்வியாக்ரபாதர்
மலர்கொய்துபூஜித்த சிதம்பரமே
அத்ரிமுனிவர்பால் சேஷன்பதஞ்சலியாய்
அவதாரஞ்செய்தருளும் சிதம்பரமே

௪. துன்மதன் துச்சகன் துற்றெரிசனனுதி
தொழுதுமோக்ஷம்பெற்ற சிதம்பரமே
உன்னும்வ்யாசர் சூதர்சௌனகர்சுகமுனி
உபமன்யுரும்பூஜித்த சிதம்பரமே

அ

௫. திருத்தேர்தானோடத்துஞ் சேந்தனூர்கூழுண்டு
தில்லைவாணர்காட்டின சிதம்பரமே
உருக்கமாய்த்திருக்கோவை யுரைத்தவாதவூரரால்
ஊமைப்பெண்பேசின சிதம்பரமே

௬. இல்லாளொடுநீலகண்டர் நீரில்மூழ்கி
இளமைப்பருவம்பெற்ற சிதம்பரமே
நல்லாளைப்போவார் அக்கினியிற்குளித்து
நற்பதவியடைந்த சிதம்பரமே

௭. கூற்றுவர்கணம்புல்லர் கோச்செங்கட்சோழற்குங்
கொடுத்தருளினமுத்தி சிதம்பரமே
போற்றுங்கணங்களாகத் தில்லைவாழந்தணரை
புகலிசம்பந்தர்கண்ட சிதம்பரமே

௮. திருமாளிகைத்தேவர் முதலோர்திருவிசைப்பா
திருப்பல்லாண்டுபாடின சிதம்பரமே
பெருமைசேர்மறைஞான சம்பந்தர்உமாபதி
பேறுபெற்றதுமிந்தச் சிதம்பரமே

விருத்தம்.

சிதம்பரத்தின்மகிமையெலாம் விரித்துரைத்துச்
சிவகங்கைமுதலானதீர்த்தமாடிச்
சதமாகசெம்பொன்னையாழ்ப்பாணத்தார்
தந்ததெலாமந்தணர்க்குத்தானஞ்செய்து
பதவிதருஞ்சிவபூஜைதனைநடத்திப்
பஞ்சசபைதிருமூலட்டானம்வாழ்த்தி
இதம்பெறநம் சேக்கிழார்கோயில்கட்டி
யெம்பிரான்வேட்களத்தை யிறைஞ்சலுற்றோம்.

இராகம்-ஆரபி-தாளம்-ரூபகம்

பல்லவி.

க்ஷேத்திரயாத்திரை சித்தித்ததுவிப்போது
ஜென்மந்தான் இனியேது

அநுபல்லவி.

தோத்திரத்தொடுமலர் தூவிநாரதமுனி
சுகம்பெறப்புவிபுகழ் திருவேட்களந்தனி (க்ஷேத்

சரணங்கள்.

தேனொத்தமொழியார் கனகாம்பிகைபாகன்
திருநெல்வாயிலிது தேவர்பூஜித்தார்பேலே
வான்மீகமஹாரிஷி மலர்கொண்டர்ச்சித்தபால்
வண்ணாநாதேஸ்வரர் மகிழ்திருக்கழிப்பாலே (க்ஷேத்)

ஆச்சாபுரமெனு நல்லூர்ப்பெருமணம்
அன்றுஞானசம்பந்தர் ஆற்றினர்கல்யாணம்
நாச்சியாரொடுமணம் நண்ணும்எண்ணருங்கணம்
நற்சிவலோகங்கொள்ளே பெற்றாரிதுப்ரமாணம். (க்ஷேத்)

எரிந்ததீபத்தின்நெய்யை எலிநாவால்வெளவும்போதங்
கிருள்போய்ப்ரகாசிக்க எலியின்குற்றத்தைத்தள்ளி
விரிந்தத்ரிபுவனமும் அவ்வெலியாளமா
வெலிச்சக்ரவர்த்தி யாக்குமெழில்மயேந்திரப்பள்ளி (க்ஷே)

விருத்தம்.

தேவேந்திரன்வைத்தசீகாழிப்பூந்தோட்டம் செழிப்புற்றோங்கக்
காவிரிநீர் அகஸ்தியர் தங்கமண்டலத்தைக்கணபதியால்கவிழ்க்கப்பெ
தீவரமாயதிற்பிரிந்தகொள்ளடநீர் மூழ்கிசிவபூஜைசெய்து [ற்று
ஆவலொடுதென்முலலைவாயிலெனு மரன்பதியையணுகலுற்றோம்.

இராகம்-அசாவேரி-சாப்புதாளம்

கண்ணிகள்.

இறைஞ்சினோம்தென்முல்லை வாயிலிதுசுதர்மன்
இந்த்ரன்பூஜித்தஸ்தலம் பக்தர்களே-இப்பால்
எழில்பராசரிஷி அர்ச்சித்தகலிக்காமூர்
எனும்அன்னப்பேட்டைகண்டோம் பக்தர்களே
இஃதேஉபமன்யர்அர்ச்சித்தசாய்க்காடு
என்னும்சாயாவனம் பக்தர்களே- எங்கள்
இயற்பனகாயனார் இல்லாள்தனைஅளித்து
ஈசனால்முக்திபெற்றார் பக்தர்களே
பட்டினத்துப்பிள்ளையும் இயற்பகையுப்பெர்த
பல்லவனேசம்இதோ பக்தர்களேபின்னும்
பல்லவராஜனும் அர்ச்சித்தகாவிரிப்பூம்
பட்டினப்போர்ந்தோம் பக்தர்களே

வெள்ளையானைபூஜித்த வேதாரண்யமென்னும்
வெண்காடுபரவினோம் பக்தர்களே-கொன்றை
விருக்ஷந்தன்னைப்புகழ்ந்து திருக்குளதீர்த்தமும்
ஸ்வேததீர்த்தமும்பார்த்தோம் பக்தர்களே

விருத்தம்.

தொண்டர்தமைச்சாபத்தால் துரத்திநின்ற
  பசுவையரன்சூலந்தன்னால்
தெண்டித்துவைத்திருக்கும்திருக்கோயில்காப்பிட்டும்
  திறக்கநேர்ந்து
கண்டவுடனேபிள்ளைகொன்றைமரமாகியவெண்
  காட்டைவிட்டு
எண்டிசையோரும்புகழும் இணையற்றசீர்காழி
  யேத்தலானோம்.

இராகம்-சாவேரி-தாளம்-ரூபகம்

பல்லவி.

காழிமாநகரிதுகயிலாயம்போன்றதுகாக்ஷிமஹா அரிது

அநுபல்லவி.

ஆழிசூழுமுலகில் அனந்த அற்புதம்பெய்த
அரியஞானசம்பந்தர் திருவவதாரஞ்செய்த (காழி)

சரணங்கள்.

௧. சொல்லும்மஹாப்ரளய காலத்துமித்தலம்
துதிசெய்துசுரர்வாழத் தோணியாகமிதக்கும்
அல்லும்பகலயன்மால் அமரர்கோவுமர்ச்சித்து
அடையஎண்ணினவரம்தடையில்லாமல்யாலிக்கும் (காழி)

௨. தூயகாவிரிநதி இந்த்ரன்பூந்தோட்டத்தால்
சோழநாடுமுழுதும் பாய்கின்றதெப்போதும்
மேயஞானசமபந்தர் அவதாரஸ்தலமென்று
மிதிக்கஅஞ்சிஆரூரர்வெளியினின்றேயோதுங் (காழி)

௩. விளங்கும்பிரமபுரம் தோணிபுரமசண்பை
வெங்குருபூந்தராய் வேணுபுரம்புகலி
பளிங்குபுறவங்கொச்சை கழுமலம்சிரபுரம்
பன்னிருநாமங்கள் பகரும்வேதமலி (காழி)

௪. கணாதாரபுரர் கதிபெற்றஸ்தலமிது
கடிகமழும்பிரம்ம திவ்யதீர்த்தம்சித்திக்க
மணமலிமலர் தூவிப் பிரமபுரேசனை
வள்ளல்சம்பந்தனை வாழ்த்தப்பெற்றேமிக்க (காழி)

## விருத்தம்.

சிவபாதவிதயர் தவஞ்செய்துசமண் காடொழிக்கச்சிறந்தசைவம்
அவனியிலெங்குஞ்செழிக்க அறுமுகனைத்தன்மகனாயளிக்கக்கேட்டு
கவுணியர்கோத்திரந்தன்னில்வந்த சம்பந்தர்சீகாழிவிட்டுத்
தவமிகுதியால்காட்டுப்பள்ளி மாநகரமெனுந்தலத்தைச்சார்ந்தோம்.

இராகம்-சுருட்டி-ரூபகதாளம்

## பல்லவி.

தோத்திரஞ்செய்வோம் யாத்திரைவந்து சொர்க்கத்திலுய்வோம்

## அநுபல்லவி.

மாத்திரைப்பொழுதேனும மனங்கசிந்தேதாவி
மாதேவனைவணங்கி வாசனைமலர் தூவி (தோத்)

## சரணங்கள்.

அடங்காதவிருத்ராசுரனையிந்த்ரன் அழித்திட்டதோஷம்
தொடர்ந்தெங்குந்திரிய பொன்னுலகத்தோர் சோர்ந்தார்சந்தோஷம்
அடர்ந்தகாட்டுப்பள்ளிக் கமரரெல்லாம்வந்து
அர்ச்சனைசெய்துஇந்த்ரன் ஆளப்பெற்றார்மகிழ்ந்து (தோ)

அண்ணல்சுந்தரர்க்குக் கட்டமுதத்தை அருள்குருகாவூர்
கண்ணுவரகஸ்தியர் அர்ச்சித்தசோலைக் காவினில்வெகுசீர்
பண்ணெடுஞானசம் பந்தர்நற்றமிழ்பாட
பரமன்பொற்றிருத்தாளம் அருளினர்கொண்டாட (தோ)

இப்போதுவலமாய் வந்தோம்வைத் தீஸ்வரன்கோயில்
ஒப்பிலாரத்ன வேல்இந்திரனுக் குதவினவாயில்
அப்பன்முத்துக்குமர சாமிசடாயுசம் பாதிருக்வேதமும்
அர்ச்சித்தஇத்தலம் (தோ)

## விருத்தம்.

தாவும்புள்ளிருக்குவேளூர் தலம்பிரிவுறவருந்தித்
தேவர்கோன்பூஜைசெய்த திருக்கண்ணார்கோயிலேத்தி

ஆவலோடயனர்ச்சித்த அரன்கடைமுடியிறைஞ்சி
மூவர்தேவாரம்பெற்ற முதல்நின்றியூர்காண்கின்றோம்.

இராகம்-உசேனி-சாப்புதாளம்

கண்ணிகள்.

மாயோன்பிரந்தை மயக்கந்தீர்ந்திட ஹரஹரவென
மகாலக்ஷ்மிபூஜைபுரிந்த நின்றி யூரே
ஏயர்கோன்கலிக்காம ருயிர்பெற்றும்நந்தர்க்குவிலகி
இடபதேவர்யிருக்கும்புன் கூரே
அருட்சோமநாதரன்பர்முனையடுவார் அவதாரஸ்தலம்
ஆனநீர்அர்ச்சித்தனர்மங்க வான்
வருணராஜன்பூஜைசெய்த அன்னியூர் ஆப்தசகாயர்
வருணநீர்மூழ்கி வந்தித்தவர்க்கருள் வான்
கல்யாணசுந்தரேஸ்வரர்வேள்விக்குடி ராஜபுத்ரனுக்குக்
கடவுள்செய்தனர் கல்யாண வேள்வி
நல்லம்மான்போலஎதிர்கொள்பாடியில் தட்பதிகளை
நகர்க்கழைத்ததும் நம்பனெனக் கேள்வி
மன்மதன்வந்தித்த அருள்வள்ளநாதனை ஆமைபூஜித்து
வைசியனும்மணஞ் செய்தமணஞ் சேரியே
மன்மதனையீசன்நெற்றிக்கண்ணிலெரித்த திருக்குறுக்கை
மார்க்கண்டர்தலம்பெய்தோமலர் மாரியே
பூதவடிவாயெதிர்வந்தாஈசனை யெறிந்தஇந்த்ரன்
பூஜிக்கப்பொறுத்த கருப்பறிய லூரே
காதலோடனுமாரர்ச்சித்தகுரக்குக்காவாழ்கொளிபுத்தூர்
கண்ணன்மாணிக்கம்வைத்து வந்தித்த ஊரே
ஆலாலம்ஈசன்கண்டத்தில்காண்பிக்கும்மண்ணிபடிக்கரை
அமுததீர்த்தத்தில் ஆடியேவாழ்த்திவந் தோம்
மேலாம்ஓமாம்புலியூரில்புலியால் வில்வமரமேறி
வேடன்விழித்துப்பூஜிக்ககேட்டுகந் தோம்
கானாட்டுமுள்ளூர்சிவதீர்த்தமூழ்கிப் பதஞ்சலிமுனி
கனிந்துபூஜித்துக்கண்டார்அரன் காக்ஷி
மேனாள்துர்வாஸர்சாபத்தால்காந்தர்வன் நாயாயிருந்து
வேண்டினகொள்கைக்கு நாயூரே சாக்ஷி

தபமிகுந்தநம்பியாண்டார் நம்பிபொல்லாப்பிள்ளையார்
தம்மைநிவேதனம்உட்கொள்ளச்செய் தனரே
அபயகுலசேகரசோழராஜன் நம்பியாண்டாரால்
அடங்கன்முறைகண் டகமகிழ்ந் தனரே

விருத்தம்.

நம்பியாண்டார்வந்த நாரையூர்வாழ்
நாதனையுந்தநயனையும் பணிந்துவந்தங்
கும்பர்அமிர்தங்கடைய நுரையெழும்ப
உய்விக்கும்அமிர்தம் எழும்படியாயிந்த்ரன்
நம்பனையர்ச்சனைசெய்த கடம்பூர்கண்டு
நற்றிருப்பந்தணநல்லூர் தேவகன்னி
சம்புவைபூசனைபுரிந்ததென்றறிந்து
தரிசித்துத்திருக்கஞ்ச னூர்சார்ந்தோமே.

இராகம்–அசாவேரி–ஆதிதாளம்

கண்ணிகள்.

மாவிரதியருக்கு மணமகள்முடிதந்த
மானக்கஞ்சாறர்ஸ்தலம் இஷ்டர்களே
காவிரிநதியிதோஅக்கி அயனிந்த்ரன்மார்க்
கண்டரும்பூஜித்தார் இஷ்டர்களே
மூன்றுகோடிரிஷிகள் பூஜித்துவரம்பெற்ற
முதல்வன்திருக்கோடிக்கா இஷ்டர்களே
ஈன்றாள்மங்கலக்குடி யிறந்த () அடியவரை
எழுந்துவரச்செய்ததங்கி இஷ்டர்களே
தாடகையெனும்அம்மை மாலைசாத்தமுடியைச்
சாய்த்ததிருப்பனந்தாள் இஷ்டர்களே
நீடுங்கயிறுபூட்டி கலையரிழுப்பவீசன்
நேர்நின்றருளினர்காண் இஷ்டர்களே
தூய்மைதிருவேரகமென்னுஞ்சுவாமிமலை
தொழுதுவந்தோமிப்போது இஷ்டர்களே

---

() அரசிறைப்பொருளை திருப்பணிக்குச் செலவழித்தஅரசன்தண்டலாளரான அடியார்.

ஆயன்பாலையுகந்துகொடுவாள்வடுவைகாட்டும்
ஆய்ப்பாடியிறைஞ்சினேம் இஷ்டர்களே
செவ்வேள்பூஜைசெய்து ஆயுதம்பெற்றதிருச்
சேய்ஞலூரைத்தொழுதோம் இஷ்டர்களே
செவ்வையாகப்பூஜித்தச் சண்டேஸ்வரநாயனார்
திருஅவதாரஸ்தலம் இஷ்டர்களே
திருந்துதேவன்குடி தேவர்களும்அஸ்வமும்
சீராய்ப்பூஜித்ததென்பர் இஷ்டர்களே
மருந்தையுயிர்ப்பிழைக்க தந்தருளும்வியலூர்
வலம்வந்து துதிசெய்தோம் இஷ்டர்களே
மன்னுங்கொட்டையூரிது மார்க்கண்டர்முதலான
மகாரிஷிகள்பூசித்தார் இஷ்டர்களே
இன்னம்பர்ஸ்தலமிதோ எத்தும்அகஸதியர்க்கு
இலக்கணஞ்சொன்னதென்பர் இஷ்டர்களே
சுந்தோபசுந்தரர் பூசித்தபுறம்பயம்
தொழுதுதோத்திரஞ்செய்தோம் இஷ்டர்களே
சுந்தமலிவணிகன்சர்ப்பத்தாலிறந்திட
சம்பந்தர்உயிர்தந்தார் இஷ்டர்களே

விருத்தம்.

திருப்புறம்பயத்தைவிட்டு சீராரும்விஜயமங்கை
அருச்சுனதீர்த்தமாடி அண்ணலார்தமைப்பணிந்தே
விருப்புறும்வில்வதீர்த்தம் விளங்கியவைகாவூரில்
குருக்களால்விடையும்பெற்று குரங்காடுதுறைசேர்ந்தோமே.

இராகம்-காம்போதி-தாளம்-ரூபகம்
கண்ணிகள்.

அழகியசடைமுடி நாதனைப்பூசித்தார்வாலி-சகல
அண்டங்கள்ரக்ஷிக்கும் அன்னையுமதரித்தாள்பொற்றாலி
ஆப்தசகாயேசர் வாழ்திருப்பழனம்அப்பூதி-யடிகள்
அடைந்தனர்பதவியை அப்பர்திருநாமம்ஓதி
வாழையிலைகொய்த மூத்தவனைசர்ப்பந்தீண்டி-யவர்
மாய்ந்திடஎழுப்பினர் பதிகமோதியப்பர்வேண்டி
செம்பொற்சோதிநாதர் உறையுந்திருவையாறு-தரும
தேவதையுநந்தி தேவரும்பெற்றனர்பேறு

நெய்யாடியப்பர் உறைகின்றதிருநெய்த்தானம்-வியாக்ரம்
நேசமாய்ப்பூஜித்ததாகும்புலியூர் ஸ்தானம்
பரிந்திந்த்ரனல்பூஜை புரிந்ததிருமழபாடி-தொழுது
பழூர்போற்றினேம் கொள்ளட்டதிநீராடி
அண்ணலார்யானையை யுரித்துப்போர்த்ததிந்தவழூர்-தேவி
அக்னிசொரூபமாய் தரிசனம்அருளியகானூர்

விருத்தம்.

கானூரைத்தொழுதுவந்து அன்பிலாலந்துறையைக்கண்டுவாழ்த்தி
வானோர்தம்மிறையயன்மால் வாகீசனெனுமுனியு மகிழ்ந்தர்ச்சித்து
மேனாளில்அருள்பெற்ற தறிந்துமாந்துறைபாற்றுத்துறையும்வேண்டி
ஆனைபூஜித்தஜம்பு கேஸ்வரத்தையனைவோரும்அணுகலானேம்.[டி

இராகம்-காம்போதி-தாளம்-ரூபகம்
கண்ணிகள்.

அகிலாண்டநாயகிபாகன் ஜம்புகேஸ்வரர்
ஆக்ஷிகொண்டதிந்த ஆனைக்காவே
புகழ்சேர்ஈசனுமைக்கு ஞானோபதேசத்தைப்
பொருந்தவுரைத்ததிந்த ஆனைக்காவே
பராசரமாமுனி சோழன்கௌதமராதி
பலபேர்அர்ச்சித்ததிந்த ஆனைக்காவே
சராசரம்புகழ்நாவல் வனமும்அப்புலிங்கமும்
தண்காவிரியுஞ்சார்ந்த ஆனைக்காவே
நம்பன்னகஜம்புமுனி கயிலாயந்தனிலீந்து
நாவல்கனியுண்டான் ஆனைக்காவே
சம்புஉமிழ்ந்தவித்தை ஜம்புமுனியருந்தி
ஜம்புநாவல்வளர்ந்த ஆனைக்காவே
என்றும்பிரியாமலே ஜம்புமரத்தடியில்
இறைவன்எழுந்தருளும் ஆனைக்காவே
நன்றாய்யானைசிலந்தி பரவியேசாம்ப்ராஜ்யம்
நல்கப்பெற்றதிந்த ஆனைக்காவே
அரசன்தேவியாரத்தை திருமஞ்சனவழியாய்
அத்தனணிந்ததிந்த ஆனைக்காவே
திருநீறிட்டான்மதிலை நீற்றைக்கூலியாய்த்தந்து
சித்தர்கட்டினதிந்த ஆனைக்காவே

விருத்தம்.

ஸ்ரவிஜோம்ஆனைக்கா பைஞ்ஞீலிரத்நசபைபரிந்துவாழ்த்தி [சித்தல்
சுரர்கள்அரம்பையர்வாழை மரங்களாய்ப்பாறையின்மேல் சூழ்ந்தர்ச்
வரலொடுமார்க்கண்டராலிறந்தநமன்எழுந்ததையும்வந்தநாவுக்
கரசருக்குக்கட்டமுது அருளினதும் அறிந்திப்பால்அணுகினோமே.

தரு இராகம்-கேதாரகௌளம்-ரூபகதாளம்

பல்லவி.

பூவலஞ்செய்துமற்றுள்ளஸ்தலமும் பூஜித்துப்போற்றல்நற்றவமே
சிவபுண்யங்கைகூடவும்எண்ணமீடேறவும் புவியாளவுஞ்செயுஞ்சிவ
[மே

அநுபல்லவி.

மூவரால்பைஞ்ஞீலிக்கருளியதேவாரம்
முழுமையும்ஓதித்துதித்தோமிந்தோம்
காவலன்பெண்ணுக்குக்குமரகண்டவலி
காழிவேந்தன்தீர்த்ததிருவாசிக்கிணையிலி (பூவல)

சரணங்கள்.

இத்தலம்பாச்சிலாச்சிராமமென் றிம்பரியம்புகின்றாரே-ஊரர்
இவரல்லாற்பிரா னில்லையோவென்றேதி யிச்சித்தபொருள்பெற்றாரே
அத்தன்மேல்ஐயடிகள்காடவர்கோன் அருளியவெண்பாசீரே-இந்த
ஆரண்யவிடங்கர்நீலகண்டேஸ்வரர் அம்மைவிசாலாட்சியாரே[வாய்
வித்தகர்அகஸ்தியர் ஈவடிவமாய் விரும்பியர்ச்சித்தார்ஈங்கோய்-மலை
தத்தையிக்கலியிலர்ச்சித்தசேலம் சார்ந்தநம்பாவம்நசித்திடுங்காலம்.

மாணிக்கமாமலையிரத்நகிரியே வாட்போக்கியெனுந்தலமே-ஆர்ய
மன்னவன்மாணிக்கமெங்குங்கிட்டாமல் வந்திங்குபோற்றினபலமே
தானுவருளியநீர்த்தொட்டிநிறைக்கச் சரியிலைகாவிரிஜலமே-வாளால்
சாகளத்தனிக்கத்தடுத்துமாணிக்கந் தந்தவனாவந்தோம்வலமே
வேணவரம்பெறலாம்கடம்பந்துறை
விளம்புவாட்போக்கி ஈங்கோய்மலையிறை
காணப்பெற்றோமிந்நாள் காலையுச்சிமாலை
கண்ணுவர்க்குக்காக்ஷி கடம்பினில்மேலை (பூவலஞ்)

பொன்மயிலாம்பிகைபாகன்பராய்த்துறை பொருந்தியபராய்மரமே
எவரும்புகழும்அகண்டகாவிரியாற்றில் பூஜித்துப்பெற்றோமுரமே

தென்பராய்த்துறையாய்சிவலோகாவென திருவாதவூரர்தோத்திரமே
அன்றி-செய்தனரர்ச்சனையிந்த்ரன் தனதன் சிறந்தசப்தரிஷிஸ்திரமே
மன்னவன்ஈழநாட்டின்கண்ணுதித்து
வந்தனன்கற்குடிமலையைமதித்து
முன்னவன் அசரீரி அருளியவண்ணம்
முடித்தார்சிவார்ச்சனை உச்சியில்திண்ணம் (பூவலஞ்)

பஞ்சவர்ணநாதர் திருமூக்கீச்சுரம்பணிந்தோமிஃதுறையூரே-பிரமன்
பரிவாலர்ச்சிக்கபொழுதொருமேனியாய்பார்த்திந்தப்பெயரிட்டாரே
தஞ்சமிகும்புகழ்ச்சோழனவதார ஸ்தலமே-ராஜதானிசிரே-யிப்பால்
சார்ந்தோம்திரிச்சிராப்பள்ளியில்ராமரும் தாழ்ந்தர்ச்சனைசெய்தாரே
மஞ்சுசேர்செவ்வந்தி பாதலத்திருந்து
வருவித்துப்பயிர்செய்த மலர்களைத்தெரிந்து
அஞ்சாமலரசன் அடைந்ததனாலே
அழித்ததுமண்மாரி பெய்து முன்னாலே (பூவலஞ்)

புத்ரதவஞ்செய்துரத்நகுத்தன்பெற்ற
புதல்வியைதனகுத்தன்மணந்து-வாழும்
போதுசுக்ரவாரம்மாதுர்ப்பூதேசரை
போற்றுவள் அந்தப்பெண்ணுணர்ந்து
செத்தனன் தந்தையப்பெண்கர்ப்பமெனத்
தெரிந்துநற்றாய்காயங்கொணர்ந்து-வர
சிறிதும்வற்றாமல்காவிரிவெள்ளத்தால்
திகைத்தனள்வடபால்அணைந்து
அத்தனார்தாய்போல் மருத்துரம்ஆற்ற
ஆறுவடிந்தபின்நற்றாயுந்தோற்ற
மற்றிருதாய்மாரை மருளவேபார்க்க
மறைந்தனர்தாயுமானவர்காக்க (பூவ)

விருத்தம்.

திரிசிரபுரங்கடந்து சிற்றெறும்புகள்தம்மாலும்
கரதூஷணர்தம்மாலும் கண்டுபூஜித்துவேண்டும்
வரம்பெற்றஎறும்பூரை வாழ்த்தியேசோழராஜன்
தரிசித்தநெடுங்களத்தைத் தாழ்ந்திப்பால்சூழ்ந்தோம்பாரீர்:

இராகம்-பைரவி-அடதாளம்

பல்லவி.

இந்தஸ்தலத்தின்எல்லைந்தாமச்சு எமபயமினியில்லை

அநுபல்லவி.

சந்ததமும்நித்ய சுந்தரேசர்மகிழ்ந்து
சார்ந்தநெடுங்களத்தின் சாம்பவியைப்புகழ்ந்து

சரணங்கள்.

செவ்வந்திமலர் இளையாள் விரும்பராஜன்
திருடித்தந்தனரந்நாள்
அவ்வரசியரில்மூத்தாள் தன்பாகத்தை
யரனுக்கணிந்தாள் பன்னுள்
செவ்வையாயம்மாதை மண்மாரியில்ரக்ஷித்த
தீயாடியப்பர்மேலைக் காட்டுபள்ளிபேர்பெற்ற (இந்த)

தஞ்சைமாநகரீது இத்தலம்போல ஜகத்தினில்கிடையாது
விஞ்சைவித்தைகள்சேது இமயவ்னா விர்த்திக்கிந்நகர்மாது
கஞ்சமலர்கொண்டிந்த்ரன் கனசோழன்குறுமுனி
நெஞ்சுருகியர்ச்சித்து நேர்ந்தார்நல்வரந்தனி (இந்த)

காவிரிநதிதீரம் பகீரதன் கங்காநதியில்சாரம்
தேவர்களாரவாரம்இந்நகர் விட்டுச்செல்வதென்றூல்விசாரம்
ஆவலாலரன்மாயோன் ஆட்சிகொண்டவித்தலம்
அரசாண்டசர்ப்போஜி அமைத்ததர்மம்ப்ரபலம் (இந்த)

விருத்தம்.

அழகுதேர்தஞ்சைமாநகரம்விட்டிங்
காத்மநாதேஸ்வரர்தாம்அமரும்ஆலம்
பொழில்சேர்ந்திங்கிதிலஷ்டவசுக்கள்நாகம்
பூஜித்ததறிந்துபின்னுமங்நாளீசன்
மழபாடிவரமறந்தனையோவென்று
வந்திருந்தவன்றெண்டர்க்குணர்த்தக்கேட்டு
வழிமிகுந்தகாந்தர்வராலேபுஷ்ப
வனஞ்செய்யவரமளிபூந்துருத்திவந்தோம்.

இராகம்-ஆனந்தபைரவி-ஆதிதாளம்.

கண்ணிகள்.

அப்பர்சுவாமிகளிங்கு அடியார்களுக்கமுது
அருத்திக்கொண்டிருக்கையி

லன்று

ஞா... தசம்பந்தர் மதுரையில்சமண்காட்டை
  ஒழித்திங்குவரவெதிர் சென்று
வாகீசரால்முத்துச் சிவிகைதாங்கப்பெற்று
  வந்தவன்னைவள்ளலார் கண்டு
வேகமாய்ச்சிவிகையை விட்டிரங்கியப்பரை
  விரும்பித்தழுவிக்கொண்ட துண்டு
வைரவக்கடவுளால் பிரமனடுச்சிரத்தை
  வாங்கின திருக்கண்டி யூரை
கைலேபோலுங்கண்டு காவிரிநதியாடிக்
  கழல்பணிந்தோமடி யாரை
உலவாஅமுதளித்த திருச்சோற்றுத்துறையீசன்
  ஒப்பிலாம்பிகைக்ருபை தெரிந்து
புலவன்முதலானோர்கள் பூஜித்துவரம்பெற்ற
  புண்யஸ்தலந்தன்னைப் பிரிந்து
வந்திறைஞ்சினேம்வேதி குடியைமுன்பூஜித்து
  வரம்பெற்றனர்வேதங்கள்நிதி யோன்
இந்ததென்குடித்திட்டை காமதேனுகௌதமர்
  இறைஞ்சக்ருபைசெய்தனர்பதி யோன்
ஆலந்தரித்தோர்வாழும் திருப்புள்ளமங்கைகண்டு
  அண்டினேம்ஐயம்பேட்டை யென்னும்
மேலாஞ்சக்கரப்பள்ளி சயந்தனும்வானோரும்
  விரும்பிமலர்தூவியே மின்னும்
பூஜித்தார்கருகாவூர் ராசிகள்சந்த்ரன்
  புலியையுரித்தபாலைத் துறையே
நேசித்தோம்திருநல்லூர் அப்பர்க்குச்சிவதீட்சை
  நினைப்பின்படிசெய்தனர் இறையே
அமர்நீதிசிவப்பேறடைந்தஸ்தலத்தைவிட்டு
  அஞ்சலிசெய்தோம்சத்தி முற்றம்
உமையவளோர்காலம்பூஜித்து அநுக்ரஹம்
  உற்றதாயிங்குபெற்றோம் வெற்றம்

விருத்தம்.

சத்திமுற்றந்தொழுது திருப்பட்டீச்சுரம் அடுத்துத்தரிசித்தேத்தி
முத்துப்பந்தரைவெப்பந்தணித்தருள சம்பந்தமூர்த்தியார்க்கந்
கத்தனார்பக்ஷமொடுபூதங்களிடத்தனுப்பி அடியார்கையில்
சித்தித்தமகிமைதனைத்தெரிந்துபழையாறைவந்துசேர்ந்தோமாதே.

இ-ம் அபூர்வம்-தாளம்-ஜம்பை.

தக்கன்பெண்கள் இருபத்தெழுவரை சந்த்ரன்மணஞ்செய்தும்
மிக்கரோஹணியிடத்து விருப்பம்வைத்ததனால்
சந்த்ரன்தேய்ந்திடசாபம் தக்கன்தர அதைஒழித்து
வந்துபஞ்சுயாறைதனில் வரவரம்பெற்றான்
கௌரியம்பிகைகணவன் காதல்கொண்டவடதளியைக்
கௌசிகமாமுனிபரவிக் காக்ஷிகொண்டனரே
மானேக்தியவிறையை மறைத்துவைத்தவமணர்களே
ஆனேதேய்த்திடவப்பர் அண்ணலைக்கண்டாரே.

விருத்தம்.

பன்னலஞ்சேர்வடதளியைப்பிரிந்தங்காவூர்ப்
பசுபதீச்சரம்பணிந்துவந்தோமிப்பால்
முன்னம்அமிர்தங்கடைந்துதுரையாற்செய்த
மூத்தோனேபாத்மார்த்தமாகஇந்த்ரன்
தன்னாலேடரவவலஞ்சுழியாயிங்குச்
சார்ந்தகாவிரிநதிபாதாளஞ்செல்ல
உன்னும்வரகண்ட்முனிசுழியில்வீழ
ஓடுநதிசேர்கும்பகோணம்வந்தோம்.

இ-ம்-தன்யாசி-ரூபகதாளம்

கண்ணிகள்.

மங்களநாயகிபாகன்கும்பேஸ்வரர்
மருவிவாழ்ந்திடுங்கும்பகோணம் ஹேம
மாமுனியும்ஆதிசேஷன் முதலியோரும்
மகிழ்வோடர்ச்சித்தகும்பகோணம்
பிரமன்ஸ்ருஷ்டிநிமித்தம்மேருவில்வைத்தகும்பம்
ப்ரளயத்தில்வந்த கும்பகோணம்-பின்னர்
பெம்மான்வேடவடிவாய் அக்கும்பத்தைச்சேதிக்க
ப்ரபஞ்சந்தந்தருள் கும்பகோணம்
குடம்உடைந்ததினின்று ம்அமிர்தஞ்சூழ்ந்ததுஐந்து
குரோசனேஎல்லை கும்பகோணம் உடைந்த
கும்பம்இருந்தவிடத்தமுதந்திரட்டிவந்த
கும்பேஸர்தலங்கும்பகோணம்
ஹேமபுஷ்கரணிஎன்னும் மாமகதீர்த்தம்

இலங்கப்பெற்றிடுங்கும்பகோணம்-அன்றி
இப்பால்திருக்குடந்தை கீழ்க்கோட்டம்சிங்கக்கிணர்
இரவிபூஜித்தகும்பகோணம்
கௌரிபூஜித்து மணஞ்செய்ததிருக்குடந்தை
காரோணம்சேர்கும்பகோணம்-அமுத
கதிரோன்மாந்தாதார் சத்தியகீர்த்திமுதலோர்
கனிந்துபூஜித்த கும்பகோணம்
கங்கையமுனைசிந்துவாணி நர்மதைகோதை
காவிரிவரும்கும்பகோணம்-பாபங்
கழித்திடமாமககாலத்தில்ஹேமபுஷ்
கரணியில்மூழ்குங்கும்பகோணம்.

விருத்தம்.

அங்கம்பொற்றாமரைப்பூ வாகியகும்பகோணந்
தங்கியேஸ்தலத்தின்மான்மியஞ் சம்பூர்ணமாகக்கேட்டு
மங்கலமனந்தஞ்செய்து மகிழ்ந்துநாகேஸ்வரம்போய்
எங்கணற்சேக்கிழாரை யிறைஞ்சியேமருதூர்சேர்ந்தோம்.

இ-ம் ஆனந்தபைரவி-ஆதிதாளம்

கண்ணிகள்.

மருதப்பருந்தேவியு மருதவிருக்ஷமும்வாழும்
மத்யார்ச்சுனமென்னுமரு தூரே
முருகக்கடவுள்யானை முகவனுமையவளும்
முகுந்தனும்பூசித்தமரு தூரே
சந்த்ரன்த்வாதசாதித்தர் சப்தகன்னிகையருஞ்
சரஸ்வதியும்பூசித்தமரு தூரே
இந்த்ரனயிராவதம் அஷ்டதிக்குப்பாலகர்
எழில்வேதங்களர்ச்சித்தமரு தூரே
புகழ்மல்குமுருத்திரர் அஷ்டநாகங்களும்
போதனும்போற்றினமரு தூரே
மகிமைதங்கு முப்பத்துமுக்கோடிரிஷிகளும்
மலர்தூவிப்பேறுபெற்றமரு தூரே
சீராரும்வரகுண பாண்டியர்கொலைப்பழி
தீர்த்தருளியவிடைமரு தூரே

ஊரறியவரசன் மனைவியைமருதப்பர்
உட்கொண்ட திருவிடைமரு தூரே

எள்ளைசோரன் தின்னப் பிறவிதீருமென்றவன்
எச்சிலரசனுண்டமரு தூரே

கள்ளன்மேல்நீறுகண்டு விடுத்துந்தவனைகட்குக்
காசும்பொன்னுந் தூவியமரு தூரே

கோயில்முற்றந்தனிலே நாய்காடமிருந்ததைக்
கோமான்எடுத்தவிடைமரு தூரே

மேயவேப்பம்பழங்கள் சிவசொரூபமென்று
வேந்தன்விதானஞ்செய்தமரு தூரே

விருத்தம்.

வரகுணபாண்டியராஜன் தலைஓட்டைத்தொழுத
மருதூராவிட்டுத்
திரிபுவனம்பரவி அதிலவ்வரசன்நடுக்கத்தைத்
தீர்க்கக்கேட்டு
மிருகண்டர்சுக்ரீவன் வழிபடுதென்குரங்காடு
விரும்பிவாழ்த்தி
வருணராஜன்நீலக் குடிபணிந்துமென்மேலும்
வணங்கலுற்றோம்.

இ-ம்-நாட்டை-ஜம்பை-தாளம்.

வானோரும்சூரியரும் மலர்தூவிவரம்பெற்ற
வைகன்மாடக்கோயில் வாழ்த்தப்பெற்றோமே
கோளேரிராயபுரம் என்னுந்திருநல்லமிது
மேனளில்உமையவள் விண்ணோர்பூஜித்தார்கள்

விருத்தம்,

காசியில்வாசஞ்செய்த காலத்தில்சமதுபந்த
பாசத்தைநாசஞ்செய்து பரிசதீக்ஷையும்புரிந்த
பூஜாவிசேஷதர்ம புரமடாதீனம்வாழுந்
தேசிகர்தமைப்பணிந்து திருக்கடவூர்சேர்ந்தோமே.

இராகம்-சௌராஷ்டிரம்-ஆதிதாளம்.

கண்ணிகள்.

க. அமுர்தகடேஸ்வரர் வீரட்டானேஸ்வரர்
அபிராமித்தாய்வாழுங் கடவூரே-இங்க
அகிலந்தன்னிலெங்கெங்கும் அமையாமகிமையெல்லாம்
அடங்கப்பெற்றதுந்திருக் கடவூரே

உ. அருந்தவத்தால்வந்த மார்க்கண்டமாமுனி
அருச்சனைசெய்த திருக் கடவூரே-எமனை
அணுகாவண்ணம்உதைத்து அம்முனிவனையீசன்
ஆதரித்தருளிய கடவூரே

ங. பொன்தேடிப்புண்ணியம் புரிந்தகாரிநாயனர்
போற்றப்பெற்றதிருக் கடவூரே-பத்னி
பூண்டிருந்ததாலியைக் கொடுத்துக்குங்கிலியங்கொண்ட
புகழ்க்கலயனர்ஸ்தலங் கடவூரே

ச. பிரமனேர்ப்ரளயத்தில் மறந்தசிருஷ்டியைப்பெற்ற
பிறமயானஞ்சேர்திருக் கடவூரே-இது
பிரமதீர்த்தம்காசித் தீர்த்தமாடித்தொழுது
பிரியலானேந்திருக் கடவூரே

விருத்தம்.

சந்தனென்கின்றவித்யா தரனுக்குப்பொல்லாச்சாபம்
இந்திரனலேநேர்ந்தங் கிசனைக்குயிலாய்ப்பூஜை
சந்ததஞ்செய்துமுன்போல் சரீரமேகிடைக்கப்பெற்ற
நந்திகோழம்பம்விட்டு நாகைக்காரோணம்வந்தோம்.

தரு-இ-ம் காம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

நாகைக்காரோணப்பெருமை உரைத்திட
நம்போலிகட்கும் அருமை

அநுபல்லவி.

தேகத்துடனேயோக புண்டரீகரிஷியைத்
திருவுருவிற்கலக்கச் செய்தருளியவிந்த (நாகை)

சரணங்கள்.

க. நித்யதீர்த்தங்கடல் தீர்த்தம்தேவதீர்த்தம்
நிறைந்தமுனிவர்தீர்த்தம் சர்வதீர்த்தமும்புல்ல
சத்தரிஷிகள்விஸ்வாமித்ரர் அகத்தீஸ்வரர்
சதுர்முகனியமனும் துதிசெய்தர்ச்சித்தநல்ல (நாகை)

உ. வாசுகிமுதலியநாகங்கள் கன்னிகைகள்
மாலும்வணங்கப்பெற்ற நீலாதாக்ஷியிறையை
நேசமாய்முசுகுந்தச் சக்ரவர்த்தித்தொழுது
நீங்காப்ப்ரம்மஹத்தியை நிக்ரஹித்தவனுறை (நாகை)

ங. பாண்டியன்க்ஷயநோய் பற்றறவாங்கின
பாரதகுலத்தான்ஆதி பத்தர்தோன்றியோங்கின
ஆண்டகைசுந்தரர்க்கு யாவுந்தந்துதாங்கின
அருஞ்சாபமிந்த்ரன்விகுர்தனுக்குமுற்றும்நீங்கின (நாகை)

விருத்தம்.

நண்பரேகேளீரந்த நாகபட்டணத்தைவிட்டு
மண்புகழுறுசோமாசி மாறனூர்மகநாள்தன்னில்
பண்புறவுதித்தஅம்பர் பெருந்திருக்கோயில்பார்த்தோம்
விண்புகழ்திருவாரூரை மேவினோந்தாவினோமே.

இராகம்-அடாணா-ஆதிதாளம்.

கண்ணிகள்.

க. பூர்வதவப்பயனால் போற்றப்பெற்றோமிந்த
புவனந்தனிற்சிறந்த ஆரூரே
தேரழகுக்குரிய க்ஷேத்ரம்எனச்சகல
தேவர்களும்புகழும் ஆரூரே

உ. அல்லியங்கோதைபாகன்புற்றிடங்கொண்டவர்
ஆக்ஷிபெற்றதிரு வாரூரே
வெல்லும்பரவைவீடு தூதுநடந்த வீதி
விடங்கப்பெருமான்வாழும் ஆரூரே

உ. அயன்மாலிந்த்ரன் வசிஷ்டர்கௌதமர்முதல்
அருச்சனைசெய்ததிரு வாரூரே
இயல்சேர்நமிநந்தி கமலாலயதீர்த்தம்
எடுத்துவிளக்கெரித்த வாரூரே

௩. சிவாஞ்ஞையின்படி பரவையைச்சுந்தரர்
திருமணஞ்செய்ததிரு வாரூரே
அவனருளாற்றிருத்தொண்டத்தொகைவன்றொண்டர்
அருளிச்செய்ததுமிந்த வாரூரே

௪. அழலேந்திபசுவாய்த்தேரில் எமனைகன்று
யகப்படச்செய்ததிரு வாரூரே
கழற்சிங்கர்செருத்துணைவிறன்மிண்டர்தண்டீசர்
கதியடைந்திட்டதிரு வாரூரே

௫. அசிதரிஷிமுதலோர் அர்ச்சித்தவகிலேசர்
அரநெறிஸ்தலம்சார்ந்த ஆரூரே
உசிதமாய்த்துர்வாசர் வருணன்தொழும்பரவை
உண்மண்டளியும்வாய்ந்த வாரூரே

விருத்தம்.

சிராருமநுநீதிச் சோழராஜன்
சிறந்தபுதல்வனைத் தேரிலிடறச்செய்த
ஆரூரின்றிருவிளையாடனைத்துங்கேட்டிங்
ககண்டகமலாலயநீராடிப்பூஜை
பேராகநடத்தியபின்மூலட்டானம்
ப்ராகாரஸ்தலமுதலாய்ப்பணிந்தபின்னர்
ஆராலுமளவிடாமகிமைவாய்ந்த
அற்புதவாவடுதுறையை யணுகினேமே.

இராகம்-எதுகுலகாம்போதி-ரூபகதாளம்

பல்லவி.

திருவாவடுதுறை சேவித்தோம்இன்னமுஞ்
சிவஸ்தலயாத்திரையேன்

அநுபல்லவி.

மருவாருங்காவிரி சிவகங்கைதீர்த்தமும்
வலஞ்செய்கின்ற அரசமரமகிமையும்வாய்ந்த (திரு)

சரணங்கள்.

௧. மாசிலாமணியீசர் செம்பொற்றியாகேசரை
வாசவன்வானோர்கள் மஹரிஷிகளர்ச்சித்த (திரு)

௨. எந்தைஞானசம்பந்தர் தந்தையாகம்புரிய
 வீசனுலவாக்கிழி நேசமாயருளிய (திரு)
௩. அரசின்கீழ்திருமூலர் மூவாயிரவருடம்
 அருந்தவஞ்செய்துமூவாயிர மந்த்ரமருளிய (திரு)
௪. கைலாயபரம்பரை நமச்சிவாயமூர்த்திகள்
 கனஞ்சேர்மடாலயக் காக்ஷிக்கடல்நிறைந்த (திரு)

விருத்தம்.

கடல்சூழ்ந்தவுலகந்தன்னில் கைலாயமுதலாவுள்ள
வடநாடுதுளுவந்தொண்டை மகதநாடீழம்பாண்டி
குடதிசைமலாடுகோங்கு குன்றுச்சோணுடும்பார்த்தோம்
மடபதியருளும்பெற்றே மகிமைசேர்காஞ்சீவந்தோம்.

இராகம்-நாதநாமக்கிரிகை-அடதாளம்

கண்ணிகள்.

௧. எழிலேகம்பர்அடியார்பக்ஷம்-இதோ
 இமையவர்தொழும் ஜோதிவிருக்ஷம்
செழுமைமேவிய ஆம்ப்ரவிருக்ஷம்-வேண்டும்
 சேவிக்கக்கண்கள்பத்துலக்ஷம்

௨. கண்டோம்திருமேற்றளி சாஸ்வதம்-நெறிக்
 காரைக்காட்டால்தீவினைஅதம்
உண்டிங்கநேகதங்காவதம்-ஓண
 காந்தன்றளியிலுண்டுசேர்பதம்

௩. பிறவாஸ்தானஞ்சேவித்தெல்லோரும்-பிறவிப்
 பெருங்கடலைத்தாண்டினேம்பாரும்
யிறவாஸ்தானங்கண்டு வாரேனும்-புகழ
 எமபயத்தைத்தொலைத்தோம் வாரும்.

௪. சம்புவீரட்டகாசம் இங்ஙனம்-சத்த
 தானத்தில்துதித்தருள் பெற்றனம்
கும்பேஸ்வரத்தில் திவ்வியதரிசனம்-புண்ய
 கோடீஸ்வரத்தைப் புகழ்ந்திறைஞ்சினம்

௫. அனந்தபத்மநாபேசம்போற்றிச்-சிவாத்
 தானம்பணிந்தோம் பூஜையாற்றித்

தனந்தருநகரீசஞ்சாற்றிச்சாந்தா
சயம்போற்றினேம் மலர்தூற்றி.

சா. குறிப்புத்தொண்டர்முத்தீசமீதே-காமக்
கோட்டம்வணங்கினேமிப்போதே
கறுத்தமணிகண்டீசம்மாதே-கணி
கண்டீசத்தாலொழித்தோம் தீதே

விருத்தம்.

உலகுய்யஅறம்வளர்த்தகாமக்கோட்டம்
ஒப்பிலாமுத்தீசம்பணிந்தோமிப்பால்
அலகிலாமகிமைசேர்சர்வதீர்த்தம்
அஸ்வநதிக்ஷீரநதிபருதிதீர்த்தம்
இலகியகம்பாநதியோடிந்திரதீர்த்தம்
இவையெலாம்ஆடிமகிழ்நீடிவந்தோம்
மலமகற்றும்வருணீசம்முதலாவுள்ள
மழுவேந்திஸ்தலமற்றும் வணங்குவோமே,

இராகம்-எதுகுலகாம்போதி-தாளம்-ரூபகம்

கண்ணிகள்.

க. பூதநாதன்வாழும்புண்யஸ்தலங்கள் அபாரம்-காஞ்சி
புரத்தினில்சர்வமும்பூஜித்தாலுண்டோ விசாரம்

உ, காலாலக்ஷமும் நாம்வணங்கிக்கரை ஏற-லாமோ
நற்றவமிங்குள்ளார் பெற்றதெவ்வளவெல்லை கூற

ங. வந்தோம்வருணீசம்வாய்வேசம்வரா கேசம்-நாம்
வணங்கித்துதித்தோம்வசிஷ்டேசம்வன்மீகேசம்

ச. அழகானஅயிராவதீசம்மஹாகை லேசம்-இது
அத்ரீசம்மஹாருத்ரேசம் அகஸ் தீசம்

ரு. ஏகபேசம்லக்ஷ்மணேசம் ஆனந்தருத் ரேசம்-வந்
தேற்றினேம்தர்மேசம் தான்றோன்றீசம் சகஸ்திரேசம்

சா. பைரவேசம் பலராமேசம் பாதா ளீசம்-பஞ்ச
பாண்டவேசம் கௌசிகேசம் கர்னேசம் சித்தீசம்

எ. வலம்புரீசம் வன்னிகேசம் மாதரம ரேசம்-இது
மச்சேசம் கற்கீசம் மஹாலிங் கேசம்

விருத்தம்.

கங்கையைத்தரித்தோன்வாழுங் கற்கிசமுதலாக்கண்டோம்
மங்கலதீர்த்தமாடி வணங்கினேம்குமரகோட்டம்
துங்கஞானப்பிரகாச தாய்மடாதினம்ஏத்தித்
தங்கினேமந்தகேசம் சாற்றுவோம்போற்றுவோமே.

இராகம்-புன்னகவராளி-அடதாளம்

கண்ணிகள்.

க. மந்தகேஸ்வரம்வளர் மன்மதேஸ்வரம்
அந்தகேஸ்வரம் அருணசலேஸ்வரம்

உ. இராவணேஸ்வரம்வீர ராகவேஸ்வரம்
இரேணுகேஸ்வரம்திரிபு ராந்தகேஸ்வரம்

ந. காரோணீஸ்வரம்இது கச்சபேஸ்வரம்
சூரிரேஸ்வரம்சொல்லும் ஜுரஹரீஸ்வரம்

ச. கங்கணீஸ்வரம்அம்பி காபதீஸ்வரம்
எங்குமேபுகழ்எழில் ரிஷபேஸ்வரம்

ரு. காணுதகாக்ஷிகச்சி காட்டினசாக்ஷி
நீணுலகாக்ஷியிது நிரந்தரம்மாக்ஷி

விருத்தம்.

சூரியேஸவரமாதிபோற்றிக்கொண்டோம்
துதிசேர்புண்ணியகோடிமஞ்சள்தீர்த்தம்
மாரிபொழிகாயாரோகணமும்வேக
வதிநதியோடளவிலாத்தீர்த்தமூழ்கிச்
சீரிதாகப்பத்தி அன்புகொண்டு
சிவபூஜாகிரியையெலாம் நடத்திக்கொண்டோம்
பேரியல்சேர்ந்திடுமாகாளீசமாதி
பேணுவோம்கண்கொண்டு காணுவோமே.

இராகம்-தர்பார்-ரூபகதாளம்

கண்ணிகள்.

க. மாகாளீஸ்வரஞ்சென்னிசூடினேம்-வளத்து
வாக்ஷீஸர்பாதங்கொண்டாடினேம்

யோகாசாரியதளியைநாடினேம்-அநுதருதரேஸ்வரத்தில்
அன்பாய்க்கூடினேம்

௨. ஆதிபதீசஞ்சேர்ந்து பாடினேம்-சந்திர
மவுலீசம்வணங்கிக்கூத்தாடினேம்
வேதபுரீசனைநாம்தேடினேம்-வயிர
வீசம்பரவிவினைஜாடினேம்

௩. இதுவேகண்ணீசந்துயரோட்டும்-யிர
ணீசம்பிறவிநோயைவாட்டும்
சிதம்பரேஸ்வரங்காக்ஷிகாட்டும்-இஷ்ட
சித்தீசந்திருவருள்கூட்டும்

௪. தக்ஷேஸ்வரஞ்செல்வத்தைக்கொடுக்கும்-ஜலந்
தரீசம்எமவாதையைத்தடுக்கும்
கிஷ்ணேஸ்வரத்தில்நன்மை அடுக்கும்-குளி
கேசம்முதலாய்வினை ஓடுக்கும்

௫. நல்லகாஞ்சிமகத்துவமே சொல்லும்
நாலனைலக்ஷம்க்ஷேத்திரமே
எல்லாஞ்சேவித்துத் தோத்திரமேசெய்தோம்
இனிதவஞ்செய்யநாம் பாத்திரமே

விருத்தம்.

திர்த்தயாத்திரைசெய்தேஅன்பத்தாறு
தேசம்வலம்வந்துசிவஸதலங்கள்யாவும்
பார்த்துவருட்பாவைந்தும்பாடிவந்தோம்
பாரளந்தோன்றலங்களேயும்பணிவோமென்றே,
ஆர்த்தியொடுநால்வேதம்பரவிச்சூழ்பொன்
னரங்கமுதலாமெங்கள்விஷ்ணுதேவர்
சீர்த்திபெறுந்திவ்யதிருப்பதிகளான
க்ஷேத்திரயாத்திரைகல்லால்செப்புந்தானே.

விருத்தம்.

பெரியாழ்வார்பேயாழ்வார் பூதத்தாழ்வார்
பெருமைதங்கியபொய்கைமங்கைநாதன்
திருமழிசைக்கோன்மதுரகவிசொற்பாணன்
திகழ்தொண்டரடிப்பொடியார்சேரர்மன்னன்

அருள்மிகுந்தநம்மாழ்வார்கோதைகூரத்
தாழ்வாரெம்பெருமானுராளவந்தார்
வரமார்வேதாந்ததேசிகர்பொற்பாதம்
மணவாளமுனிகள்பதம்வணங்கிச்செல்வாம்.

இ-ம்-பைரவி-ரூபகதாளம்.

கண்ணிகள்.

க. பரமபதம்என்னும் வைகுண்டம்பரவினோம்
பரமபாகவத கோஷ்டிகளே
விரஜாநதி அந்த ரங்கவிமானங்கூ
விளவிருக்ஷமும்விளங்கும் கோஷ்டிகளே

உ. அனந்தகருடவிசுவசேனர்நித்யர்களுக்கு
ஆவதுண்டுபிரத்தியக்ஷம் கோஷ்டிகளே
தினம்பிரம்மாதிகள்தொழும் க்ஷீராப்திநாதன்வாழ்
திருப்பாற்கடல்மேவுங் கோஷ்டிகளே

ங. ஆறுமாதம்அமரர் அர்ச்சித்திடும்வதரி
ஆஸ்ரமம்அணுகினோம் கோஷ்டிகளே
வீறுசேர்சீதள உஷ்ணகுண்டமூழ்கி
வெவ்வினையையொழித்தோம் கோஷ்டிகளே

ச. இலந்தைமரத்தின்கீழ் நரனுக்குமந்த்ரோப
தேசஞ்செய்தஸ்தலம் கோஷ்டிகளே
நலந்தங்கியசாளக்கிராமம் சக்ரகண்டகி
நதிமகிமையுங்கண்டோம் கோஷ்டிகளே

ரு. அய்யன்மோகினியாகி அசுரரையடக்கி பிரம்
மாதியர்க்குபிரத்தியட்சம் கோஷ்டர்களே
தெய்வநைமிசாரண்ய திவ்யவிசாரந்ததிர்த்தம்
மூழ்கித்துதித்தோம் கோஷ்டிகளே

சா. சரயுநதியருகில்ராமர் அரசுசெய்த
ஸ்தலமாம் அயோத்திநகர் கோஷ்டிகளே
பரதாழ்வாருக்கும்மீதவர்முனிவர்கட்கும்
அட்சமொடுபிரத்தியட்சம் கோஷ்டிகளே

எ. இலங்குஞ்சிங்கவேள்குன்றம் என்னும்அகோபிலம்
இலக்ஷுமிநரசிம்மன் கோஷ்டிகளே
நலந்தருமிந்த்ர தீர்த்தம் பாபநாசதீர்த்தம்
நாரசிங்கதீர்த்தங்காண் கோஷ்டிகளே

அ. காதகனிரண்யனை ஒழித்தவன்றனையனைக்
காத்தருள்புரிந்தனர் கோஷ்டிகளே
தீதகல்கங்கைக்கரைக் கண்டந்தங்கிமங்கள
தீர்த்தமாடித்தொழுதோம் கோஷ்டிகளே

௯. பணிந்தோம்ஸ்ரீகிருஷ்ணன் சத்தியபாமைருக்மணிதேவி
பகரும்வடமதுரை கோஷ்டிகளே
துணிந்துயமுனைவெள்ளம் மூழ்கித்திருவாய்பாடி
தொழுதுபிரபந்தஞ்சொன்னோம் கோஷ்டிகளே

௰. கோவர்த்தனதீர்த்த மிந்த்ரதீர்த்தம்வாய்ந்த
கோலதிருப்பிரிதி கோஷ்டிகளே
ஆவலுடனேகிருஷ்ண மூர்த்திதிரௌபதிக்கு
அருள்செய்யுந்துவாரகை கோஷ்டிகளே

௰க. ஸ்ரீநிவாசன்வாழும் திருவேங்கிடமலை
சேவித்துவாழ்த்தினோம் கோஷ்டிகளே
ஆனந்தநிலயம் விமானம்சேஷாசலம்
அடங்காமகிமையுண்டு கோஷ்டிகளே

விருத்தம்.

பண்டுபொற்கடலாதிவேங்கட மீறனதலம்பன்னிரண்டுங் [ன்னில்
கண்டிறைஞ்சிவடநாட்டைக்கடந்துதொண்டைநாடெய்திக்காஞ்சித
தண்டுழாய்மாலதலங்கள்பதினான்கும்நிற்க மற்றத்தலங்களெட்டுந்
தெண்டநிட்டுநடுநாடுசேர்ந்திரண்டுக்ஷேத்திரயாத்திரையுஞ்செப்பும்

இராகம்-காம்போதி-அடதாளம்

கண்ணிகள்.

யோகநரசிம்மர்சோழசிங்கபுரம் பார்த்தோம்-இவண்
ஒருநாழிகைப்போதிருந்த அவர்க்கன்பு சேர்த்தோம்
செல்வந்தருந்திருவல்லிக்கேணி தன்னைச் சேர்ந்தோம்-நாம்
சேவித்துச்சேஷவிமானம் பார்த்துக்குறை தீர்ந்தோம்

அருகில்திருமயிலாபுரியில் பே யாழ்வார்-செவ்
வல்லிமலரில்சதய நாளில்வந்து வாழ்வார்
நித்யஸ்தலசயனத்துறை வார்கடன் மல்லை-எங்கள்
நிலமங்கைத்தாயாரை நினைத்தாற்பிறவி கோயில்லே
புவனம்போற்றும் பூதத்தாழ்வாரிங்கவதரித் தாரே-எந்தை
() புண்டரீகமஹாரிஷிக்குப் பிரத்தியக்ஷமா ஞரே
கல்யாண தீர்த்தங் கதியைத்தருமிட வெந்தை-மார்க்
கண்டர்க்குப்பிரத்தியக்ஷமாகின்றார் அயன் றந்தை
நீலமுகில்வண்ணர்நீர்வண்ணர் நீர்மலை சூழ்ந்தோம்-திரு
நின்றவூரில்பக்தவச்சலரைத்தாழ்ந்து வாழ்ந்தோம்

---

() புண்டரீகரிஷிக்கெந்தைபிரத்யக்ஷம்
பூதத்தாழ்வாரவதாரம்-பெரிய
பூமியிலித்தலம்அர்த்தசேதுவான
புண்யமகத்வம் விஸ்தாரம்
அண்டர்புகழ்பொய்கை தாமரைபுட்பம்
ஆயிரதளகெம்பீரங்-கண்டு
அழகியக்ஷீராப்திநாதனுக்காமென
அம்முனிக்காசை அபாரம்
அண்டாசமுத்திரம் புண்டரீகமுனி
அடியோடிறைக்கலுற்றனர் தன்னந்தனி
உண்டியுறக்கமுமில்லைஓய்வில்லை
ஒருநாளோவெகுநாளாய்வடியவேயில்லை
வளையாதிறைக்கையில் க்ஷீராப்திநாதன்
மறையவராய்தரிசனமே-தந்து
மஹாபசியென ஆகாரம்யாசிக்க
வருந்தினமாமுனிமனமே
திரைகடல்தன்னை மறையவரிறைத்துத்
திஷ்டாந்த்ரங்காட்டினார்கனமே-வெகு
தீவரமாயொரு யோசனை தூரந்
திரைகடல்வடிந்தது அனமே
விரைவாயின்னக்ர மாமுனியோடி
மிக்கஆகாரங்கொணர்ந்தனர் தேடி
வருதற்குமுந்தியே சயனித்தாரெந்தை
மார்மீதில்தாயாரைவைத்ததும் விந்தை

மார்க்கத்தில்மழிசையில் மழிசையாழ்வார்ஆதிவாரம்-மகர
மாதம்கிருட்ணபக்ஷம் பிரதமைமகம் அவதாரம்
வீக்ஷாரண்யவீரராகவ எவ்வளூர்கண்டோம்-மிக்க
விளங்குந்திருப்புட்குழியில் தங்கிகுறைவிண்டோம்
அண்டரெலாம் போற்றுந் தொண்டைவளநாட்டைப் பிரிந் [தோம்-பெண்ணை
ஆற்றில்நீராடி நடுநாடெங்குந்தேடித்திரிந்தோம்
சந்த்ரவிமானஜந்திரபுரம்சுரர்வாச-மிதைச்
சார்ந்தகெருடநதியைக்கண்டோர் பாபம்நாசம்
திரிநேத்ரதாரியாய்தெய்வநாயகர்நிற்பதேனோ எங்கள்
தேசிகர்சீரிங்குசெப்பவல்லான்சேஷன்ரூனோ
திருவிக்ரமனென்னும் ஆயனூர்கோவலூரீது-கிருஷ்ண
தீர்த்தமாடிநின்றதிருக்கோலங்கண்டோமிப்போது
சௌரிபலிச்சக்ரவர்த்திக்குப் பிரத்தியக்ஷக்ஷேத்ரம்-இதைத்
தாண்டிமலைநாடுசார்ந்து செய்தோம்நல்லஸ்தோத்திரம்

விருத்தம்.

பெண்ணைசூழ்நடுநாட்டைப்பிரிந்துமலை
நாடுவந்துபிரபஞ்சமென்னும்
மண்ணையுண்டமால்வாறன்விளைமுதலா
யனந்தபுரம் வரைத்தலங்கள்
எண்ணுதற்கிங்கரிய மகிமைகள்வாய்ந்த
பதின்மூன்றுமிறைஞ்சிவாழ்த்திப்
புண்ணியத்தைக்கொள்ளைகொண்டபொற்புறயாத்
திரைகல்லால்புகலுமேலும்.

இராகம்-தன்யாசி-சாப்புதாளம்

கண்ணிகள்.

க. இன்றுவாறன்விளைவர்துநின்றகுறளப்பனே-நாம்
எண்ணினோம் துதிபண்ணினோம்
அன்றயனுக்குப்பிரத்யக்ஷமானஎர்தைகாக்ஷி
நமக்களிப்பரோ உண்மைதெளிப்பரோ.

உ. மதன்ருக்மாங்கதராஜன் மகிழ்திருக்கடித்தானம்
வந்தித்தோம்நிதம்சிந்தித்தோம்

உதவும்நல்விற்றுவக்கோர்ட்டில் உய்யவந்தப்பெருமாள்
சீருணாத்தோம்வினையைக்களைத்தோம்

௩. பெருமைசேர் ஆதிகேசவப்பெருமாள்வாட்டாற்றின்
மேன்மைபேசினோ மிடரைவீசினோம்
அருமையாம் பாம்பணையப்பன் அருளும்வண் வண்டூர்
வணங்கல்ஆரியம்சிறந்தகாரியம்

௪. வல்லவாழ்கோலப்பிரானை வணங்கிநாராயணன்
நாவாய்வாசமே செய்யநேசமே
தல்லியாம்லக்ஷ்மிக்கும் கஜேந்த்ரனுக்கும்
பிரத்தியக்ஷமான தாமே துயர்போமே

௫. செங்குன்றூர்மையாரப்பனைச்சேவித்துமாயப்
பிரானைத்தேடினம் புலியூர்பாடினம்
மங்களஞ்சேர்மூழிக்களம் அப்பன்காட்கரை
ஸ்தலத்தில்வாழ்குவோம் வலஞ்சூழ்குவோம்

௬. இந்த்ரகல்யாணவிமானந்தங்கும் வண்பரிசாரந்தான்
எழுமையேமிக்க செழுமையே
சந்த்ரனிந்த்ரனுக்குக் காக்ஷித்தந்தஅனந்தபுரத்தைத்
தாவினோம்பாண்டிமேவினோம்.

விருத்தம்.

மலைநாடுதனைவிட்டுப்பாண்டிவளநாடெய்திமகிழ்ந்துகோளூர்
தலையாரமதுரகவிஸ்தலம்பணிந்துதமிழ்வேதம்ஓதினான்
வலையால்மால்சிக்கமனத்தடைத்து மாலிருஞ்சோலைமலையீருகக்
கலையாரும்க்ஷேத்திரங்கள்பதினெட்டின் யாத்திரையைக்கழறுங்கல்
[லால்.

இராம்-பியாகடை-ரூபகதாளம்

கண்ணிகள்.

வையையுறும்பாண்டிவளநாட்டில்கோளூர்வைத்தமாநிதிசூழ்ந்தோ
[ம்
கோளூர்வல்லித்தாயால் வாழ்ந்தோம்
நற்குறுங்குடிவந்துநாம்கண்டோம்மலைமேல் நம்பிபாற்கடல் நம்பி
கிடந்தநம்பிநின்றிருந்த நம்பி
குளந்தைதனில்மாயக்கூத்தனிடங்காத்துக் குளந்தைதாயைப்பார்த்
தோம்
பெருங்குளதீர்த்தம் ஆர்ந்தோம்

வரகுணமங்கையில்வாழ்விஜயாசனர்வரகுணவல்லிசெல்வி
பாதம் வணங்கிப்பெற்ரேம் கல்வி
வந்தோம்ஸ்ரீவைகுந்தம்கண்டோம்கள்ளப்பிரான்வைகுந்தநாதரம்மா
ஸ்ரீவைகுந்தவல்லியம்மா
மகரநெடுங்குழைக்காதர்திருப்பேர்வாழ்த்திவலமாக
நாம் வந்தோம் வினைபோக
போவோம்புளிங்குடிகாசினிவேந்தர்பொன்னுலகீவாரே
பரிபூரணராவாரே
வானமாமலை ஆனவரமங்கைவானமாமலைநீதன்
இந்த்ரன் வாழ்த்தும் தேவநாதன்
வருணன்வாயுவிந்த்ரன்மகிழும்தொலைவில்லிமங்கலம்தேவப்பிரான்
நல்லவாழ்வளிப்பர் எம்பிரான்
ஆழ்வார்திருநகராதிப்பிரான் நம்மாழ்வார்அவதாரம்
நமக்கருள்வதவர் பாரம்
ஆண்டாள்ரங்கமன்னனூர்வடபத்ரசயன ஸ்ரீவில்லிபுத்தூர்
பெரியாழ்வார் அவதாரவூர்
வையம்புகழ்கூடலழகர்தென்மதுரைமகிழ்வரகுணவல்லி
வகுளவல்லி மதுரைவல்லி
காளமேகப்பெருமாள் க்ஷீராப்திபுஷ்கரணிதிருமோகூர்
தண்காலப்பன் தண்காலூர்
புல்லாரண்யஸ்தலம்தற்பசயனமாம்கல்யாணர்புல்லாணி
வருணன்போற்றிப்பெற்றான் காணி
சத்யகிரிநாதர் திருமெய்யமீது சத்யகிரியிதுவே
அய்யாசத்யதீர்த்தம் அதுவே
யீது திருக்கோட்டியூர்சௌமியநா ராயணரெக்காலம்
நடந்திருந்தாடிய கோலம்
மாலிருஞ்சோலைமலையழகர் மாவலங்கார அன்னைதமை
அம்மாவந்தித்தோம் நங்கடமை

கொச்சகம்.

பாண்டிவளநாட்டுத்திருப்பதிபதினெட்டும்பணிந்தும்
தாண்டிவருதற்குமனஞ்சற்றேனுந் துணியாமல்
மீண்டுந்திருக்கூடல்போய் வீதியெலாம்வலம்வந்து
வேண்டும்வண்ணந்தொழுதுறைந்துமேவுவஞ்சோணாட்டிடையே

விருத்தம்.

பார்த்தசாரதிப்பெருமாளுறையுஞ்சென்னைப்
பதியல்லிக்கேணியைநாம்பணிந்தபோது
பூர்த்தியாகப்பூர்வங்கோடிபுண்யம்
புரிந்ததனுலுயர்கல்விச்செல்வமோங்கிக்
கீர்த்தியுடன்வாழ்தோட்டக்காடு ராம
கிருஷ்ணவேள் ஹைகோர்ட்டுஇன்டெர் ப்ரொட்டெராங்கே
ஆர்த்தியொடுசெய்த பேருதவியாற்பொன்
னரங்கமாநகர்வந்தோம் வலம்வந்தோமே.

இராகம்-தோடி-ரூபகதாளம்

கண்ணிகள்.

அற்புதமானபொன்னரங்கம்தொழ அனேவோரும்வாரும்-இந்த
அரங்கநாதனைக்கண்டால் அரியதீவினையாவுந்தீரும் தீரும்

இத்தலமிறைஞ்சுதற்கியாம்செய்தபுண்ணியம்யாதுயாது-இங்கு
யிருபக்கங்காவிரி யிருப்பதனுல் நமக்கேது தீது

போற்றும்புன்னைவிருட்சம் புஜங்கசயனமிதோபாரும்பாரும்-சந்தர
புஷ்கரணியிலாடிப்புண்யங்கொள்ளைகொண்டோம்வாரும்வாரும்

அழகியமணவாளப்பெருமாளுறையூர் அடைந்தோமின்று-இமை
யவர்கள்ரவிதற்மராஜனுக்கிங்கு பிரத்தியட்சமென்று

திகழுங்கல்யாணவிமானப்பிரகாச விசித்ரம்பாரீர்-நின்ற
திருக்கோலநாதனைத்தியானித்தோம் தஞ்சைசேவிப்போம்வாரீர்

சகலரும்புகழ்ந்திடுந்தஞ்சைநகரமிதுஜகத்தில்மேன்மை-பரா
சரமாமுனிக்கும்மார்க்கண்டரிஷிக்கும் பிரத்தியட்சபான்மை

வடிவழகியநம்பி வன்பிலாகியதலமகிமை பாங்கு-பிரம்
மாவுக்கும்வால்மீக மஹரிஷிதமக்கும் பிரத்தியட்சம் ஈங்கு

புருஷோத்தமர்பூர்வாதேவிகரம்பனூரைத்தெரிந்தோம்-எங்கள்
புண்டரீகாட்சர்க்குவெள்ளரையில் பூமழைசொரிந்தோம்

மணிகர்ணிகதீர்த்தம் சக்ரதீர்த்தம்பத்மதீர்த்தம் ஆடி-நாம்
வந்துபுகழ்ந்தோம் வராஹதீர்த்தம் குசதீர்த்தந்தேடி

புள்ளம்பூதங்குடிவல்வில்லிராமனைப்போற்றூர் யாரோ-எங்கள்
பொற்றாமரையாளைப்பூஜியாமல் செல்வம்பொருந்துவாரோ

# பொன்மரத்து நாடகம்.

## விருத்தம்.

திம்மராஜன் ஆண்டதொரு செங்கற்பட்டிற்
சேர்ந்தமிட்டாபதினெட்டாய் நூற்றெட்டாகுந்
தம்முடையகிராமமாய் ஸ்ரீராமற்குச்
சந்நிதிசெய் வேங்கடாசலமால்பௌத்ரி
செம்மைதவத்துதிதோட்டக் காடார்வள்ளல்
திகழ்ராமகிருஷ்ணவேள் சென்னைஸ்ரீமான்
நம்மவர்க்குத்தஞ்சையினில் நல்குசெல்வத்தால்
நற்றிருப்பேர்நகர்வந்தோம் துதிதந்தோமே.

இராகம்-தோடி-ரூபகதாளம்

கண்ணிகள்.

அப்பக்குடத்தான்திருப்பேர்நகர்தொழுதோமே-வல
தஸ்தத்தின்கீழ்குடம்வைத்த ஹேதுவைஅறியோமே

இந்த்ரகிரியீது இந்த்ரவிமானந்தானீது-இந்த
இந்த்ரதீர்த்தமாடிவந்தோமினிகுறையேது

ஆண்டளக்குமையன் ஆதனூர்அஞ்சலிசெய்தோம்-மந
தாமருவியப்பன்வழுந்தூரில் பூமாரிபெய்தோம்

அருண்மாக்கடல்திருமாமகள் சிறுபுலியூராம்-இங்
கனந்தசரசுபுஜங்கசயனமே சீராம்

சேறையெனுஞ்சார க்ஷேத்திரம்சேவித்தோமின்று-நின்ற
திருக்கோலநாதர் காவேரிக்குப்பிரத்யட்சமென்று

காந்திதலைச்சங்க நாண்மதியம் அலங்காரம்-செங்
கமலவல்லிதலைச்சங்க நாச்சியார்கம்பீரம்

ஆராவமுதர்திருக்குடந்தை யழகாகும்செல்வம்
அளிக்குஞ்சாரங்கபாணிப்பெருமாளால் வல்வினைபோகும்

அண்டர்கள்கொண்டாடுங் கண்டியூர்மகிமைவிஸ்தாரம்-விண்
ணகரத்தில்உப்பிலியப்பன் பொற்பாதம் ஆதாரம்

கண்ணபுரம்சௌரிராஜனைத்தரிசிக்கக்காலம்-இங்குக்
கண்ணுவமாமுனிக்கருளுங் காக்ஷிநின்றகோலம்

வயலாலிமணவாளர் திருவாலிநகரமேசாரம்-நாகை
வாழுஞ்சௌந்தரராஜப்பெருமாள் உதாரம்

விருத்தம்.

நாகராஜன்மங்கையாழ்வார்கண்ட
நாகைநகர் தனினின்றுவந்தபின்னர்
வேகமுறுமணிமுத்தாநதியைத்தேடி
விருப்பமுடன் ஆடித்தீவினையைஜாடி
ஏகமனதாய்ப்பெருமாள்நம்பிபாத
மிறைஞ்சிநறையூர்ச்சித்திரகூடமாதி
வாருலாம்திருப்பார்த்தன்பள்ளியீருய்
வந்தியற்றும்யாத்திரையைவகுக்குங்கல்லால்.

இராகம்-காம்போதி-தாளம்-ஆதி

கண்ணிகள்.

க. மேதவமுனிக்கருள்பெருமாள் நம்பி
மேவும்நறையூர்பார்த்தோம்-ஒருநாள்
போதல்சேர்விண்ணகரப்பெருமாள்நந்தி
புரவிண்ணகரிலென்றுந்திருநாள்

உ. ஆவாயிந்தளூர்நிகிவேளையாம்
அனுகினதால்நிற்போம்நாளை
கோவிந்தராஜப்பெருமாளைச்
சித்திரகூடத்திற்கண்டோமிந்தவேளை

ங. தாடாளர்சீராமவிண்ணகரம்சேர்ந்து
சமர்ப்பிக்கப்பெற்றோம்ரத்னசிகரம்
கூடலூர்நின்றகோலம்பகரம்கண்ணங்
குடிசாமளமேனிசுபகரம்

ச. கண்ணமங்கைக்கோயில்விநோதம்-திருக்
கவிஸ்தலகஜேந்தரபிரசாதம்
வண்ணவெள்ளியங்குடிகீதம்
மணிமாடக்கோயிலில்சதாவேதம்

ரு. வைகுந்தவிண்ணகரம்நீக்ஷி-திருவரிமேய
விண்ணகரம்ஆக்ஷி
செய்யதேவனூர்தொகைமாக்ஷி
இந்தத்திருவணபுருஷோத்தமங்காக்ஷி

௬. அணிசெம்பொன் செய்கோயில்தேடித்தெற்றி
அம்பலம்செங்கண்மாலை நாடிக்
குணநிதிமணிக்கூடம் கோடிபதவி
கொடுத்தருளுங் காவளம்பாடி.

௭. நாமெலாம்வெள்ளக்குளஞ்சூழ்ந்தோம்
கண்ணன்நாராயணர்பதத்தில்வீழ்ந்தோம்
தாமரையாள்கேள்வனைத்தாழ்ந்தோம்
இந்தத்தலம்பார்த்தன்பள்ளிதங்கிவாழ்ந்தோம்

விருத்தம்.

பொன்னிமாநதி புரளுஞ்சோழ நாட்டில்
பொருந்தியநற்பதிகள் நாற்பதையும்போற்றிச்
சென்னிநாட்டைப்பிரிந்து தொண்டைநாட்டைச்
சேர்ந்துகுறைதீர்ந்துமனந் தேர்ந்துகூர்ந்து
பொன்மறுமார்பன்றந்த பிரமன்யாகம்புரிந்த
திருக்கச்சிமாநகரமெய்திப்
பன்னகமேற்றுயில்திருமால் வாழுமீரேழ்
பதிகளின்யாத்திரைதன்னைப் பகருங்கல்லால்.

இராகம்-எதுகுலகாம்போதி-அடதாளம்

கண்ணிகள்.

எண்ணற்கெட்டாஅத்தி கிரியருளாளர்பொன்
னிணையடிகளேகண்யம்
தொழுதற்கென்செய்தோம்மிகபுண்யம்

பேருலகத்தினில் பெருந்தேவித்தாய் பேரழகம்மம்மா
காக்ஷிபெற்றுரிங்குபிர்மா

அனந்தசரசு புண்யகோடிநல்விமானம்
நின்றகோலம்வைசாகம் உற்சவகாலம்

எங்கள்கிரிகிரிசிங்கப்பெருமா ளிணங்கும்அரிதேவி
பாதமிறைஞ்சினேம் மலர்தூவி

அஷ்டபுஜம்ஆதிகேசவப்பெருமாள் அடிபணிந்தோர்கள்பக்ஷ
கஜேந்த்ராழ்வார்க்குப்பிரத்தியக்ஷம்

தண்காயெனும்விளக்கொளி மணிமாடம்சரஸ்வதிக்கேகாக்ஷி
மற்றசகலர்க்குங்கண்காக்ஷி
தெய்வதூப்புல்வேதாந்ததேசிகர் திருஅவதாரஸ்தலம்
இப்பால் திருவேளுக்கைநலம்
இனியபாண்டவர்தூதர்பாடகமிங்நிலாத்திங்கட்
டுண்டம்தொழுதோரிடரகற்றுங்கோதண்டம்
கள்வர்கார்வானம் கருணாகரர்திருக்காரகம் உயர்நீரகம்
உலகளந்தவருறையூரகம்
திருவெஃகாவினில்யதோத்காரிமுன் செந்நாப்புலவன்
சொன்னவண்ணஞ்செய்தகாரணமென்ன
அவதரித்தார்பொய்கையாழ்வாரன்றிந்த
அழகியபொய்கைதன்னில்கனகாம்புஜமலர்தன்னில்
மேவும்பச்சைவண்ணர் பவழவண்ணர்
பரமேஸ்வரவிண்ணகரம்பரவிவிரும்பினேம்அபயகரம்

விருத்தம்.

வைகுண்டம்வடநாடு தொண்டைநாடு
மலைநாடுநடுநாடு சோழநாடு
வையைசேர்பாண்டிநாடுஞ் சேர்ந்தாழ்வார்
மங்களாசாசனஸ்தலம் நூற்றெட்டும்
பையயாத்திரைசெய்தோம் புராணக்ஷேத்ரம்
பணிவோம்ஸ்ரீபெரும்பூதூர் முதலாயுள்ள
தெய்வசெல்வப்பிள்ளைராயர் தலமீறுகச்
செல்லுவோம்மகிமையெலாம் சொல்லுவோமே.

இராகம்-நாதநாமக்கிரியை-ரூபகதாளம்.

கண்ணிகள்.

க. இப்போதுபூதபுரியெனும் ஸ்ரீபெரும்பூதூர்-வந்
திறைஞ்சினேம் எங்களெதிராஜர் அவதாரமூதூர்
உ. அரிஆதிகேசவப்பெருமாள் எதிராஜவல்லிபாஷிய
காராசூர்கேசவாசாரியர்மேல் கிருபைக்களவில்லி
ங. சித்தபுஷ்கரணிதங்கிய சிங்கவேள்குன்றுவந்து
சேவித்தோம்ஜாபால்யரிஷிக்குபிரத்தியக்ஷமேயென்று

ச. வணங்கினோம்வையாவூர் மதுராந்தகம்மகிழ் விருக்ஷம்மந்திர
வாவிதீர்த்தமிது மார்க்கண்டர்க்கெந்தைபிரத்தியக்ஷம்

ரு. கருணைசேர்ராஜகோபால ராஜமன்னார்கோயில்-செங்
கமலவல்லிநாச்சியார ரித்திராநதிவாயில்

சு. சங்குதீர்த்தம்கிருஷ்ண தீர்த்தம் கஜேந்திர தீர்த்தம்-க்ஷீர
சாகரருக்மணிசக்ரகோபிநாத தீர்த்தம்

எ. கோப்ரளயதீர்த்தம்மூழ்கிப்புண்யம்யாவுங்கொண்டோம்-காக்ஷி
கோபிலகோபிரளயமஹாரிஷிகாணக்கண்டோம்

அ. பாபவிநாசப்பெருமாள்வாழும் பாபநாசம்-நமது
பங்கயவல்லித்தாயாரின்பாதம் பொற்பிரகாசம்

கூ. அஸ்வத்தநாராயணர்க்குப் பிரசன்னஸ்ரீமூஷ்டம்-வாழும்
ஆதிவராகப்பெருமாளைப் போற்றுவதிஷ்டம்

ய. வணங்கினோம்பிருந்தாவனம் வஸ்திராபஹாரதீர்த்தம்-ராதா
வல்லபன்ராதாதேவியார்க்குப் பிரத்தியக்ஷமூர்த்தம்

யக. திருநாராயணபுரம் செல்வப்பிள்ளைராயர்சேர்வை-நாம்
செய்துபிரபர்தத்தால்துதித்துப்பெற்றோம் அருட்பார்வை

யஉ. கல்யாணதீர்த்தம்வைகுந்ததீர்த்தம் தனுஷ்கோடிதீர்த்தம்
கண்டுபராசரதீர்த்தம் யாதவதீர்த்தம்ஆடி

யங. பாண்டவதீர்த்தம்மயித்திரேயதீர்த்தத்தில்நடித்தோம்-லோக
பாவனதீர்த்தமும்ஆடி எண்ணமெல்லாம்முடித்தோம்.

விருத்தம்.

அச்சுதன்றலங்கள்யாவும் யாத்திரைபுரிந்துநம்மால்
இச்சித்தபடியிறைஞ்சியிந்த்ர சம்பத்தும்பெற்றோம்
கச்சிமாநகரம்வந்தோம் கம்பர்க்குநடக்கும்பிரம்ம
உச்சவமாதலாலே உவப்புடன்தரிசிப்போமே.

இராகம்-சுருட்டி-ரூபகதாளம்

கண்ணிகள்.

யாமிங்குவந்தகாலம்பிரம்மோற்சவகாலமாய்
அமைந்தது நற்காலமே

சாமியையீன்ற சிவகாமிநேயனுற்சவந்
தரிசிப்பதனு கூலமே

இன்றுமுதல்நாள்ராத்திரிநன்றுய்ச்சிங்க
வாகனத்திறைவர்சேவைதந்தாரே
ஏன்றுங்குன்றயாச்சூரியசந்திரப்பிரபை
விளங்கவிரண்டாநாள்வந்தாரே

எந்தைபூதத்தின்மீதுகாலை வந்தாரிரவில்
ஏசற்குவந்துநின்றார்
சந்திரன்மகிழ்ஐந்துதலை நாகவாகனந்
தனிலெழுந்தருள்கின்றார்

நாலாநாளிரவினில் பாலநேத்திரனைப்போற்றி
நாற்றிசையோரும்வாழ்ந்தார்
மேலுலகத்தில்நின்றும் வானவர்யாருங்
கச்சிவீதியில்வந்து சூழ்ந்தார்

நெடியகைலைநிகர்விடைமேல் ஏகம்பநாதர்
நீங்காஅம்மைகாமாக்ஷி
உடனெழுந்தருளி எவ்வுயிருமீடேறச்
சேவைஉதவினர்கண்காக்ஷி

ஐந்தாநாள்காலையிது அதிகாரநந்திமீது
அண்ணலருள்புரியயாரும்
இந்தவிரவிலிராவணன்மேல் மகிழ்ந்துசேவை
யீந்தருள்கின்றார்பாரும்

ஆறுநாள்காலைசப்ரமீதுவந்தோரிரவில்
ஆனைமேற்கொண்டருளினர்
மாறுகத்திருத்தேரில் ஏழாநாள்உற்சவமும்
வாழ்வுறக்கண்டருளினர்

நேற்றுப்பிக்ஷாடனனாக் காலைகண்டோமிரவில்
நிமலனைப்பரியில்கண்டோம்
ஏற்றசிவிகைமீதும் தோற்றுமாவடியிலும்
போற்றிஆனந்தங்கண்டோம்

நாளையதினம்பத்தாநாள் பங்குனியுத்திரம்
நமக்கும்வேண்டும்பொற்காணம்

நாளைப்போவாரையாண்ட நடராஜரும்வருவார்
நடக்குந்திருக்கல்யாணம்
எமையாளும்உமையவள் தமயன்றிருக்குளத்திற்
கெழுந்தருள்கின்றகோலம்
சமயஞ்சமயமென்று சட்சமயத்தோர்களுந்
தரிசனஞ்செய்யுஞ்சீலம்
எம்பிரானருள்நாடி கம்பாநதியைத்தேடி
யிங்கேதிரும்பும்பார்வை
அம்பிகைநம்பனுக்காய் உம்பர்கள்சூழ
விருந்தவம்புரிசேர்வை
வணங்கிக்கணங்கள்சூழ நித்யமணாளர்கா
மாக்ஷிக்கருள்சம்பந்தம்
அணங்குமிணங்கிமணம்புரிந்து பரிந்தனைய
அகத்திற்கொள்ளும்ஆனந்தம்
எத்தலத்திலுங்காணோம் எவ்வுலகத்துங்காணோம்
ஏகம்பர்க்கேதக்கது
இத்தலம்வாய்ந்ததென்று சித்தமகிழ்ந்துமற்றும்
ஏத்திமெய்ப்பத்திமிக்கது

கொச்சகம்.

நாற்றிசையும்புகழ்கம்பர் நல்விழாப்பொலிவுகண்டு
சாற்றும்வஸ்த்ர அன்னசொர்ன தானமுதலாணதர்மம்
ஆற்றியேகம்பருக்கிங் கபிஷேகந்தனைநடத்திப்
போற்றினோம்அரியதவம் புரிகுவோம்வருவீரே.

இராகம்-செஞ்சுருட்டி-ஆதிதாளம்.

கண்ணிகள்.

௧. நம்பனேகம்பனே நடராஜனே நால்வர்
நற்றமிழுகந் தோனே
உம்பரிம்பர்கள்போற்றும் எம்பிரான்-தம்பிரானே
உமையம்மைக்கிசைந் தோனே

௨. ஆற்றையுநீற்றையும் அணியுந்தேஜோமணியே
ஆலாலமுண்ட மணியே

போற்றுமார்க்கண்டர்க்காக கூற்றுதைத்தமணியே
புரமூன்றெரித்த மணியே

௩. ஆதியேஅனாதியே சோதியேமான்மழு
அபயவரத கரனே
நீதியேஉமையவள் பாதியேவேதனும்
நீண்முடிகாணா வரனே

௪. பெண்ணொருவந்திக்காக மண்ணைச்சுமந்துதிர்ந்த
பிட்டிற்கிஷ்டமுற் றோனே
பண்மகிழ்பாணனுக்கா யேமாதன்றனோடப்
பாடிவிறகுவிற் றோனே

௫. மாறன்வெகுண்டடித்த மாறடியாரும்பட்டு
வாழ்த்தும்பொன்வண்ணமேனியே
ஆறுநீறணிவோனே மாறிநரியரியா
யாக்கும்பரம ஞானியே

௬. என்னமந்தாரைகொன்றை புன்னைவன்னி
மாம்கிழிலந்தை தரித்தாய்போற்றி
துன்னுங்கோங்குநாரத்தைபாரிஜாத
மத்தமசோகுதரித்தாய் போற்றி

௭. சந்தனஞ்சண்பகங்குருந்து ஆத்திதேவ
தாரம்புனைந்தாய் போற்றி
ஐந்துவில்வம்பாடலம் வெள்ளெருக்கொடுநெல்லி
யாவும்வனைந்தாய் போற்றி

௮. இவ்விதமாகவெல்லா மரமுமேகம்பனை
யெங்குகனைத்தந்தோனைச்
செவ்விதின்வந்தித்து மாதவஞ்செய்யக்கண்டு
சேவைதரவந்தோனை

௯. ஆதரவாய்மரங்கள் யாவுங்கேட்டவரந்தான்
அலைகடல்சூழ்பூகோள
மீதில்பொன்மரம்ஒன்றே நாதனருளால்-சர்வ
விருக்ஷங்களையும் ஆள

௰. மனத்தில்நினைந்தோமென்ன கேட்டவரமுந்தந்து
வாழ்வளித்தாரேகம்பர்
தினைத்துணைத்தவத்தையும் பனைத்துணையாகக்
கொண்டதிருவுளந்தேர்ந்தும்பர்

௰௧. நத்தம்பொன்னம்பலன் நித்தம்பரவுங்கம்பர்
நற்றுளிற்சிரந்தாழ்த்திப்
பத்தியுடன்புகழ்ந்து புஷ்பமாரிகளெங்கும்
பரவப்பொழிந்தார்வாழ்த்தி

௰௨. வாழிநால்வேதம்வாழி ஆகமம்வாழிநல்ல
மறையவர் சைவர்வாழி
மேழிச்செல்வர்கள்மன்னர் வாழிவைசியராதி
மெய்யடியார்கள்வாழி

௰௩. ஆழிசூழ்புவிவாழி காழ்கொள்பொன்மர
முதலனைத்துமரமும்வாழி
ஏழிசைவாழி கவிவாணர்கள்வாழிபா
லீயும்பசுவும்வாழி.

-ooಃoo-

இ-ம்-சுருட்டி-ரூபகதாளம்

மங்களம்

மங்கைதன்னைவாமபாகம்வைத்த கங்காதரனுக்கு
மங்களம்-சுப-மங்களம்

அங்குசபாசமணிந்த ஐங்கரக்கடவுளுக்கு
மங்களம்-ஜெய-மங்களம்

வள்ளியைத்தெய்வயானையை மருவும்வேலவனுக்கு
மங்களம்-சுப-மங்களம்

கொள்ளைகொள்ளசிவலோகம் கொடுக்குஞ்சம்பந்தருக்கு
மங்களம்-ஜெய-மங்களம்

சடைபோல்கல்மிதந்திடக் கடல்நீந்தும்அப்பருக்கு
மங்களம்-சுப-மங்களம்

நடராஜன்றனைத்தாது நடத்துஞ்சுந்தரருக்கு
மங்களம்-ஜெய-மங்களம்

விமலனைக்குதிரைவிற்க விடுத்தவாதவூரர்க்கு
மங்களம்-சுப-மங்களம்

அமரர்முனிவர்கள்தொண்டர் யார்க்கும்பொன்மரத்துக்கு
மங்களம்-ஜெய-மங்களம்.

பொன்மரத்துநாடகம்

முற்றிற்று.





